ஆஸனம் நிராதாரமெனவும் ஆதாரமெனவும் இரண்டு பிரிவாம்.
சித்சக்திமயத்தாயுள்ளது நிராதாரமும் (௧௧௨) அனந்தாஸநமு
தல் விமலாஸநம்வரை ஆதாராஸநமெனவுங்கூறப்படும் நிராதாரா
ஸனம் சிதாகாசமும் ஆதாராஸனம் ஜடாகாசமுமாய்முடியப்பெரு
ம் (௧௧௩) ஐந்தாஸனங்கள் ஆதேயம் இவைகள் பிருதிவிமுதல் ஆகா
சம்வரையுள்ளது பிருதிவி அநந்தாஸநமும் அப்புஸிம்மாஸநமும்
(௧௧௪) யோகாஸநமக்னியும் பத்மாஸநம்வாயுவும் விமலாஸநமாகா
சமுமாய்க்கூறப்படும் (௧௧௫) இதற்குமேலும்சிதாகாசமும் இதற்
குமேல் சிவாஸனமுமாயிருத்தலின் இந்த ஆஸநபஸ்திராஸனமெண
வும் இதைச்சேர்த்து ஆஸநம் ஆறெனவுங்கூறப்படும். (௧௧௬) சிதா
காசமும்சிவபெருமானும் பிரிக்கமுடியாச்சக்தியுடையது இதினால்
இந்த திரிவ்யபூஜைக்கு சலாஸனம் பூஜித்தல்வேண்டும் (௧௧௭) தி
யானத்தோடு பூஜிப்பது விசேஷமாகும் தியானம் ஸமஷ்டி வியஷ்
டி என இரண்டுபிரகாரமாம் (௧௧௮) எல்லா தேவர்களையும் பூஜை
முடிவில் சேர்ந்தாப்போல் தியானிப்பது ஸமஷ்
டியும் ஒவ்வொரு தேவரையும் தனித்தனி தியானிப்பது வியஷ்டி
யுமாகும் (௧௧௯) பிரதிஷ்டை முதலிய கிரியாகாலங்களில் வியஷ்டி
அதாவது தனித்தனி தியானித்தலும் அன்யகாலங்களில் ஸமஷ்
டியாய் தியானிப்பது தோஷமாகாது (௧௨௦) திருவ்யபாத்திரத்தி
ற்குமேல் ஆதாரசக்தியை பூஜித்து கீழுள்ள கூர்மைசிலைக்கு பால்
போன்ற வெளுப்புவர்ணமுடையதாய் (௧௨௧) பீஜாங்குரம்போல்
கிரீடமும் வரத அபய கைகளும் ஒருதலையும் மூன்றுகண்களும்
மற்ற நான்கு கைகளில் தாமரைப்பூ நீலோதபலம் (௧௨௨) பாசம்
அங்குசம் இவைகளை தரித்த கிரியாசக்திரூபமான ஆதாரசக்தி
யை தியானிக்க. இதற்குமேல் கூர்மாசனத்தை பூஜித்து இதற்கு
நடுவில் பங்கஜத்தை பூஜிக்க (௧௨௩) பிருதிவிகந்தமாகவும் கால
தண்டாகவும் பாவித்து முள்ளுடன் கூடியதாய் கூப்தமாயாஸ்வ
ரூபமான மகா பத்மத்தை அநேகதளங்களோடு கூடியதாய் தியா
னித்து (௧௨௪) எட்டு தளங்களில் தாரிகாதி எட்டு சக்திகளை கிர
மமாய் பூஜிக்க இந்த சிதாகாச ஸ்வரூபமான சக்திகள் எல்லாத்தி
ற்கும் ஆதாரமான சக்திகளாகும்(௧௨௫)பஞ்சாஸனங்கள் இதன்
மேல்வைக்கப்பட்ட ஆதேயங்களாம் பஞ்சாஸனத்திற்கு மேலும்
சிதாஸனம் பூஜித்து அதற்குமேல் சிவாஸனம் பூஜித்தலும்வேண்
டும் (௧௨௬) இதனால் தாரிகாதி சக்தி ஆஸனம் இதற்கு திக்குக்க
ளிலும் (௧௨௭) விதிக்குக்களிலும் பூஜிப்பது சித்ஸ்வரூபமென கூற

ப்படும் கேவலம் மூலத்தால் தாறிகாதி சக்திகளை பூஜித்தல்வேண்டும் (௧௨௮) கிழக்கில் தாறிகையும் அக்கினிதிக்கில் தீபிகையும் தெற்கில்உக்ரையையும் நிருதியில்ஜ்யோத்ஸ்னுத்சக்தியையும் (௧௨௯) மேற்கில் சேதனையையும், வாயுவில் பலோத்கடையையும், வடக்கில் தாத்ரியையும், ஈசானத்தில்விபவியையும்பூஜித்தல்வேண்டும்(௧௩௦) அனந்தாஸனத்தை இதற்குமேல் பூஜித்து (௧௩௧) அனந்தனை மிச்ரவர்ணமாயும் பத்துதலையும் இரண்டுகை அஞ்சலியோடு கூடியதாய் மற்ற இரண்டுகைகள் சூலம் பாசு தறித்ததாய் (௧௩௨) மேற்கு திக்கில் தக்ஷகனை பார்த்திருப்பதாய் சிரசுக்குகீழ் புருஷாக்ருதியாய் எல்லா ஆபரணங்களையும் அணிந்ததாய் தியானிக்க (௧௩௩) தக்ஷிண திக்கில்வாசுகியை அந்த தியானத்தோடுபூஜிக்க வாசுகி சங்கவர்ணமாயும் ஏழுதலையும் (௧௩௪) நான்குகைகளும் இரண்டுகை அஞ்சலியும் இரண்டுகையில்பத்மமும் இரண்டுநேத்திரமும்(௧௩௫) வடக்கிலுள்ள கார்கோடனைப்பார்த்திருப்பதாய் சிரஸுக்குகீழ்புருஷாக்ருதியாய் எல்லா ஆபறணங்களையும்அணிந்திருப்பதாய்(௧௩௬) தியானிதது மேற்குதிக்கில் தக்ஷகனை பூஜிக்க தக்ஷகன் இந்திரநீல வர்ணமாயும் ஐந்துதலையும (௧௩௭) நான்குகையும் இரண்டு அஞ்சலியும் பாசாங்குசத்தோடுகூடியதாய் மூன்றுகண்களும் (௧௩௮) கிழக்குதிக்கிலிருக்கிற அனந்தனை பார்த்துக்கொண்டிருப்பதாய் சிரசுக்குக்கீழ் புருஷாக்ருதியாய்தியானிக்க (௧௩௯) வடக்கில்கார்கோடகனை பூஜிக்க கார்கோடகன் புகைவர்ணமாயும் எட்டுதலையும் (௧௪௦) இரண்டுகை சிரஸுக்குமேல் அஞ்சலியும் இரண்டுகை கத்திசூலமுடையதாய் தெற்குதிக்கை நோக்கியிருப்பதாய் ஒவ்வொரு முகத்திலும் மூன்று கண்களுடையதாய் (௧௪௧) வாசுகியை பார்த்துக்கொண்டிருப்பதாய் எல்லா ஆபறணங்களையும் அணிந்ததாய்தியானிக்க ஆக்னிதிக்கில் சங்கபாலனைபூஜிக்க (௧௪௨) சங்கபாலன்வெளுப்புவர்ணமாயும் ஐந்துசிரஸ்படத்துடன் கூடியதாய் நான்குகை இரண்டுகை அஞ்சலிஹஸ்தம் பாசம் உஜ்வலமிரண்டுகை (௧௪௩) வாயுதிக்கைநோக்கியிருப்பதாய் பத்மனைபார்த்துக்கொண்டிருப்பதாய் தியானிக்க இதன் பின் நிருதி திக்கில் குளிகனை பூஜித்தல்வேண்டும (௧௪௪) குளிகன் ஸ்யாமளவர்ணம் நான்கு சிரஸும் அஞ்சலிஹஸ்தம் இரண்டுகையில் நீலோத்பலமும் (௧௪௫) ஈசானதிக்கைப்பார்த்துக் கொண்டிருப்பதாய் மஹாபத்மனைபார்க்குமுகமாய் தியானிக்க வாயுதிக்கில்பத்மனை பூஜிக்க (௧௪௬) பத்மன்ரத்தவர்ணமாயும் ஐந்து சிரஸும் நான்குகைகளும்

அஞ்சலி அக்ஷமாலை குண்டிகை இவைகளுடன் கூடியதாய் (கசகூ) அக்னி திக்கிலிருக்கிற சங்கபாலனைப்பார்த்துக் கொண்டிருப்பதாய் தியானிக்க இதின்பின் ஈசான திக்கில் மஹாபத்மனை பூஜித்தல்வேண்டும் (கசஎ) காக்காப்பொன்னிரமாயும் ஆயிறந்தலைநான்குகை ஹிருதயதிலஞ்சலி (கசஅ) குடாரம்டங்கந்தரித்து நிருதியிலுள்ள குளிகனைபார்த்தமுகமாய் சிரஸிற்குக்கீழ் புருஷாகிருதியாய் (கசகூ) தியானித்துஇதற்கு நடுவில் அனந்தாஸனாயநம: எனப் பூஜித்து அனந்தாஸனம் ஹரிதாளவர்ணமாய் (கருo) அனந்தன் முதல்மஹாபத்மம்வறை விளங்காநின்றதிக்கு விதிக்குக்களோடு கூடியதாய் அமேயமான விஸ்தாரமுபாமுடையதாய் மாதத்வத்திற்கு மேலிருப்பதாய் (கருக) சதுரசிரமாவது விருத்தமாகயாவது உள்ளஸ்தானமாக தியானிக்க அனந்தாஸநத்திற்குமேல் சிம்ஹாஸநம் பூஜித்தல்வேண்டும் (கருஉ) அக்னிதிக்குமுதல் ஈசானம்வறை அக்னிதிக்கில் தர்ம்மாய நம: எனப்பூஜித்து (கருங)தர்ம்மம் வஜ்ரடபிரகாசமும் சிம்மமுகம் அஞ்சலிஹஸ்தம் பெரிகுற்றுப்பல் காளமுகம் தொங்குகிறமயிர் (கருச) ஞானத்தைப்பார்த்தமுகம் உயரநிமிர்ந்துள்ளவால் இவ்வாருள்ளதாய் தியானித்து நிருதிதிக்கில் ஞானத்தைபூஜிக்க (கருரு) ஞானம் பவளவர்ணம் இரண்டுகைசிம்மமுகம் அஞ்சலிஹஸ்தம் தொங்குகிரமயிர் (கருகூ) பெருற்றுபல் கறுளமுகம் உயர்ந்துதொங்குகிறவால் தர்மததை பார்த்தமுகம் இவ்வாறு ஞானஸ்வரூபத்தை பாவித்தல்வேண்டும் (கருஎ) இதன் பின் வாயுதிக்கில் வைராக்யத்தை பூஜித்தல்வேண்டும். வைராக்கியம்வைடூரியவர்ணமாயும்சிம்மமுகம்அஞ்சலி(கருஅ) ஐஸ்வர்யத்தைபார்த்தமுகம்தொங்குகிறமயிர்பெகிற்றுப்பல் கறுளமுகம் உயர்ந்தவால் இவ்வாறு தியானிக்க (கருகூ) ஈசானதிக்கில் ஐசுவர்யத்தை பூஜித்தல்வேண்டும் ஐசுவர்யம் முத்தின்வர்ணமுடையதாயும்சிமமுகம் அஞ்சலிஹஸ்தம்(கசூo) வைராக்யத்தைப்பார்த்த முகம் தொங்குகிரமயிர் நீண்டபல் காளமுகம் உயர்ந்து தொங்குகிரவால் இவ்வாறு தியானித்து (கசூக) கிழக்குமுதல் வடக்குவறை கிழக்கில் அதர்ம்மத்தை பூஜிக்க (கசூஉ) அதர்ம்மமிந்திர நீலவர்ணம் சிம்மமுகம் அஞ்சலிஹஸ்தம் தொங்குகிரமயிர் கறுளமுகம்வால் (கசூங) தர்ம்மத்தைப்பார்த்தமுகம் இரண்டுபாதம் இவ்வாறுள்ளதாய்தியானித்து தக்ஷிணதிக்கில் அஞ்ஞானத்தை பூஜித்தல்வேண்டும் (கசூச) அஞானம் புஷ்பராகவர்ணமாயும் சிம்

முகமாயும் அஞ்சலிஹஸ்தமாயும் தொங்குகிறமயிரோடு கூடிய
தாயும் (கசுரு) ஞானத்தைபார்த்தமுகமாயும் பயங்கரமான பல்வ
ரிசையுடையதாயும் தியானிக்க மேற்குதிக்கில் அவைராக்யத்தை
பூஜித்தல்வேண்டும(கசுசு) * அவைராக்யம் நீலவர்ணம்சிம்மமுகம்
அஞ்சலிஹஸ்தம் தொங்குகிறமயிர் பயங்கரமானமுகம் வைராக்ய
த்தைபார்த்திருப்பதாய் தியானிக்க (கசுஎ) இதற்கு பின் வடக்
குதிக்கில் அனைஸ்வர்யத்தை பூஜித்தல்வேண்டும் அனைஸ்வர்யம் கி
ருஷ்ணப்ரகவர்ணமாயும் சிம்மமுகமும் (கஎ௦) சிரஸுக்குமேல்
அஞ்சலிஹஸ்தமும் பயங்கரமான முகமும் பல்லும் ஐஸ்வர்யத்
தைபார்த்தபார்வையும் எல்லா ஆபரணங்களினாலும் அலங்கரிக்கப்
பட்டதாய் தியானித்தல்வேண்டும் (கஎக) தெற்குவடக்கு நடுவில்
ராஜஸம்தாமஸம ஸாத்விகம் இவைகளை தியானத்தோடு பூஜித்தல்
வேண்டும் (கஎஉ) ராஜஸம்பச்சவர்ணமாயும்இரண்டுதலையும் நான்
குகைகளும் ஒவ்வொரு முகத்தில் மூன்றுகண்கள் உடையதாய்
கரண்டமகுடத்தோடு கூடியதாய் (கஎ௩) அஞ்சலிஹஸ்தமுடை
யதாய் பாசம் அங்குசம் கையிலுடையதாய் பக்ஷிரூபமுகமும் சிர
ஸுக்குக்கீழ் புருஷாகிருதியாய் (கஎச) எல்லா ஆபரணங்களும்த
ரித்துள்ளதாய் பாம்புபோல் பார்வையுடையதாய் தியானித்தல்வே
ண்டும் வடக்குதிக்கில் தாமஸத்தை பூஜிக்க (கஎரு) தாமஸம்கிரு
ஷ்ணவர்ணமாயும் இரண்டுதலையும் நான்குகையும் ஜடாஜூடமும்
மூர்த்தாவில் அஞ்சலிஅஸ்தமும் (கஎசு) பக்ஷியின் முகமும் ஒவ்
வொரு முகத்தில் மூன்றுகண்களும் கத்தி தடி இவ்விரண்டையும்
கையிலுடையதாய்லேலிகானபார்வையும்உடையதாய்(கஎஎ) தியா
னித்தல்வேண்டும் இவ்விரண்டுக்கும் நடுவில் சாத்விகத்தைபூஜிக்க
சாத்விகம் வெண்மைவர்ணமாயும் பக்ஷிமுகம்போலும் (கஎஅ) அ
ஞ்சலிஅஸ்தமாயும்நான்குகையும்வஜ்ஜிரம் சக்தி இவைகளை கையி
லுடையதாய் பாம்பின் பார்வைபோல் பார்வையுடையதாய் சாத்
விகத்தைபாவித்தல்வேண்டும் (கஎகூ) இதற்குநடுவில்சிம்மாஸனத்
தைபூஜிக்கசிம்மாஸனம்ரத்னவர்ணமாயும்வைடூரியம் முதலியவற்று
ல் விளங்கபெற்று (கஅ௦) தர்மம் அதர்மம் ராஜஸம்முதலியவற்று
ல் சூழப்பெற்றுள்ளது,இதற்குமேல் யோகாஸனம்பூஜிக்க (கஅக)
அதர்மத்துக்குமேல் கிழக்குதிக்கில் இருதயகத்தை பூஜிக்க இருத
யகம் ரக்தவர்ணம் ஒருமுகம் இரண்டுகை (கஅஉ) அஞ்சலி அஸ்த
ம் பிரஸன்னமானமுகம் ஒன்றையொன்று பார்த்துக்கொண்டிருப்

பதாய்பத்மாஸனத்தின்மேல்இருப்பதாய்தியானிக்க(கஅங) தக்ஷி
ணதிக்கில் திரேதாயுகத்தை பூஜிக்க திரேதாயுகம் வெளுப்புநிற
மாயும் ஒருமுகமும் (கஅச)பிரஸன்னமாய்அஞ்சலிஅஸ்தத்தோடு
கூடியதாய் பத்மாஸனத்தின்மேலிருப்பதாய் ஒன்றையொன்றுபார்
த்துக்கொண்டிருப்பதாய் தியானித்தல்வேண்டும் (கஅரு) மேற்கு
திக்கில் த்வாபரயுகததைபூஜிக்க த்வாபரம்பலவர்ணமாயும் மூன்று
கண்களும் ஒருதலையும் (கஅசு) அஞ்சலிஹஸ்தமுடையதாய்ஒன்
றையொன்று பார்த்துக்கொண்டிருப்பதாய் தியானிக்க வடக்குதி
க்கில் கலியுகத்தை பூஜிக்கவேண்டும் (கஅஎ) கலி கறப்புவர்ண
மாயும் உக்ரமாயும் மூன்றுகண்களும் ஒருதலையும் இரண்டுகைக
ளும் அஞ்சலிஅஸ்தமும் பத்மாஸனத்தின்மேலிருப்பதாய் தியா
னிக்க (கஅஅ) ஈசானதிக்குக்கும் கிழக்குதிக்குக்கும் நடுவில் அவ்
யக்தத்தைபூஜிக்க அவ்யக்தம் ஸ்படிகவர்ணமாயும் ஒருதலையும் அ
ஞ்சலிஅஸ்தமாய் (கஅகூ) பிரஸன்னமானமுகமும் காதிற் குண்ட
லமும் பாம்பின் யஞ்ஞோபவீதமும் ஜடாமகுடத்தோடுகூடியதா
ய் தியானிக்க (ககூ௦) தெற்குதிக்கிறகும் அக்னிதிக்கிற்கும்
நடுவில் நியதிநிஷ்கலத்தை பூஜித்தல்வேண்டும் நியதிநிஷ்கலம்
வெளுப்புவர்ணமாயும் ஒருசிரசு மூன்று கண்கள் (ககூக) அ
ஞ்சலி அஸ்தம் நாகயஞ்ஞோபவீதம் சுபாஸனத்திலிருக்கை இ
வ்வாறு நியதி நிஷ்கலத்தை நினைத்தல் வேண்டும் (ககூஉ)
நெருதிக்கும்மேற்கிற்கும்நடுவில் காலாயநம: என பூஜித்துகாலம்
மாதளம்பூவர்ணமாயும் இரண்டுகைஒருமுகம் (ககூங) பிரஸந்நமா
னமுகம் அஞ்சலிஹஸ்தமாய் உட்கார்ந்திருப்பதாய் மூன்றுகண்
ணுடையதாய் கட்டப்பட்டமயிருடையதாய் சுகமான ஆசனத்தி
லிருப்பதாய் தியானிக்க (ககூச) வாயுவிற்கும் வடக்கிற்கும் நடுவி
ல் கலாயெநம: எனப்பூஜித்து கலைபேதமுடையமைநிறம் போ
லும் மூன்றுகண் ஒருமுகம் (ககூரு) அஞ்சலிஹஸ்தம் சுபமானக
ல்பம்மனோஞ்ஞயமாய்பிரஸன்னமானமுகம்பாம்புயஞ்ஞோபவீதமெ
ல்லாஆபரணங்களோடு கூடியதாய்தியானிக்க (ககூசு) இதின்னடு
வில்யோகாஸனம் பூஜித்து யோகாஸனம் மனோஞ்ஞயமாய் எண்
கோணமாய் (ககூஎ) யுகம்அவ்யக்தாதிகளாகி முக்யமானவைகளா
ல் சூழப்பெற்ற விசித்திரவர்ணமுடையதாய் தியானிக்க இதற்கு
மேல் பத்மாஸனபூஜைபுறிதல்வேண்டும் (ககூஅ) அதச்சதனாய ந
ம: என நெருதிதிக்கில்பூஜித்து அதச்சதனம் வெண்மையாயும்

பக்ஷிரூபத்தால்பிரகாசித்துவிளங்குவதாய்(௧௯௯)ஸ்திரீரூபமாயும் இரண்டுகாலுடையதாயும் ஒருதலைமூன்று கண்களோடுகூடியதாய்தியானிக்க ஈசானதிக்கில் ஊர்த்துவச்சதனாய நம: எனப்பூஜித்து (௨௦௦) ஊர்த்துவச்சதனம்ரக்தவர்ணமாயும்ஒருமுகம்மூன்றுகண்பக்ஷியினுருவம்புருஷரூபமாய் பாவிக்க (௨௦௧) இதற்குமேல் கந்தாயநம: எனபூஜிக்க கந்தம் மாணிக்கவர்ணமாயும் அமேயமானவிஸ்தாரமுடையதாயும் (௨௦௨) பீஜம்முதலியவற்றிற்கு ஆதாரமுடையதாகவும்தியானிக்க. இதற்குமேல்பீஜாயநம:எனபூஜித்து (௨௦௩) பீஜம் தங்கவர்ணமுடையதாகவும் கந்தத்திற்கு ஆதேயரூபமாயும் அங்குரம்முதலியவற்றிற்கு பீஜமாதாரமாயும்பாவிக்க. (௨௦௪) இதற்குமேல் அங்குரத்தைபூஜித்து அங்குரஸ்வர்ணவர்ணமாயும் பீஜத்தின்மேலிருப்பதாயும் (௨௦௫) நாளம்முதலியவற்றிற்கு ஆதாரமாய் அங்குரத்தைதியானிக்க. இதற்குமேல்நாளத்தைபூஜித்து (௨௦௬) நாளம்பச்சைவர்ணமாயும் உயரம்அகலம்ஸமமாயும் கண்டகம்முதலியவற்றிற்கு ஆதாரமுடையதாய் தியானிக்க (௨௦௭) இதற்குமேல் கண்டகேப்யோ நம: எனபூத்துகண்டகம்ஸ்படிகவர்ணமாயும் தளமிதின்மேலிருப்பதாயும் (௨௦௮) தளம் முதலியவற்றிற்கு இதுஆதாரமுடையதாப், தியானிக்கஇதற்குமேல் தளேப்யோநம: எனப்பூஜித்து (௨௦௯) தளம்செகப்புவர்ணமாய்எட்டுதிக்கிலும் எட்டிதழோடுகூடியிருப்பதாய் கேஸரத்தோடுகூடியிருப்பதாய் நடுவில்கர்ணிகையுடையதாய் (௨௧௦) கேஸரம்முதலியவற்றிற்குஆதாரரூபமாய்தியானிகக,இதறகுமேல்கேஸரேபயோநம; எனப்பூஜித்து (௨௧௧) கேஸரம்செகப்புவர்ணமாயும் தளத்தின்மேலிருப்பதாய் கர்ணிகைக்குஆதாரமாய்தியானிக்க (௨௧௨) இதற்குமேல்கர்ணிகாயைநம: எனபூஜித்து கர்ணிகைஸ்வர்ணமாயும் சக்தியாஸனத்தை தரித்திருப்பதாய் (௨௧௩) அனேகரத்னகாந்தியுடையதாய்தியானிக்க இதின்நடுவில பத்மாஸனாயநமঃ எனபூஜித்து (௨௧௪) கந்தம் பீஜம் அங்குரம் நாளம் கண்டகம் தளம் கேஸரம் இவைகளோடுகூடியதாய் கர்ணிகையாலலங்காரமுடையதாய் (௨௧௫) உயரம்பதினாறிரம்பங்கு விஸ்தாரம் லக்ஷம்பங்குடையதாய் விசித்திரவர்ணமாய் தியானிக்க இவ்வாருசெல்லையாகபாவிப்பது பத்மாஸனமென்பதாம் (௨௧௬) இதுவரை சலாஸனமெனக்கூரப்படும். கோஷ்டநடுவில் பிரணவம் கிழக்குமுகமாக எழுதி (௨௧௭)

நிணிநடு இறுதி இவைகளில் மூன்று மூன் பாகஞ்செய்த திரவ்யத்தைவைத்து நிணியில்மஹாதேவனை தியானத்தோடுபூஜிக்க(௨௧௮) வெண்மைநிறமாகவும்ஒருதலைநான்குகைகள்மூன்றுகண் அக்ஷமாலை பாசம் (௨௧௯) அஞ்சலிமகுடம் இவைகளோடு கூடியதாய்தியானித்து (௨௨௦) ஆவாஹநஞ்செய்து நைவேத்தியஞ்செய்க நடுவில் ஹரனைபூஜித்து (௨௨௧) ரத்னகாந்தியுடையவராய் ஒருமுகம்அக்ஷமாலை பாசம் அஞ்சலிஹஸ்தமுடையவராய் தியானித்து (௨௨௨) நைவேத்யதூபதீபங்கொடுத்து பிரணவாந்தத்தில் உருத்திரனைபூஜிக்க (௨௨௩) உருத்திரனைபீதவர்ணமாயும் ஒருதலையும்பாசம்அக்ஷமாலை அஞ்சலிஹஸ்தமாய் (௨௨௪) தியானித்துஆவாஹித்து நைவேத்யதூபதீபங்கொடுத்து கிழக்குகோஷ்டத்தில்சங்கரனைபூஜிக்க (௨௨௫) சங்கரன் ஸ்படிகவர்ணம்முக்கண்ஒருதலை அக்ஷமாலை பாசம் (௨௨௬) அஞ்சலி புலித்தோலாஸனத்தின்மேலிருப்பவராய் தியானித்து ஆவாஹனஞ்செய்து நைவேத்ய தூபதீபங்கொடுத்து (௨௨௭) அக்னிகோஷ்டத்தில் நீலலோஹிதனைபூஜிக்க குங்குமவர்ணம் ஒருமுகம்அக்ஷமாலைபாசம் (௨௨௮) அஞ்சலிஹஸ்தம் கரண்டமகுடமுடையவராய் தியானித்து ஆவாஹித்துநைவேத்யதூபதீபங்கொடுத்து தெற்குகோஷ்டத்தில் ஈசனை பூஜிக்க (௨௨௯) ஒருமுகம் மூன்றுகண்சங்கவர்ணம், அக்ஷமாலைபாசம் அஞ்சலிஹஸ்தமுடயவராய் தியானித்து (௨௩௦) ஆவாஹித்து நைவேத்யதூபதீபங்கொடுத்து, நிருதிகோஷ்டத்தில் விஜயனை பூஜிக்க விஜயன் புகைவர்ணமாயும் ஒரு தலை மூன்றுகண் (௨௩௧) பாசம் அக்ஷமாலை ஜடை அஞ்சலிஹஸ்தமுடயவராய் தியானித்து ஆவாஹித்து நைவேத்யதூபதீபங்கொடுத்து மேற்குகோஷ்டத்தில் பீமனை பூஜிக்க (௨௩௨) பீமன் வெண்மை நிறமாகவும் அஞ்சலிபாசம் அக்ஷமாலை இவைகளோடு விபூதிஉருத்திராக்ஷமணிந்தவராய் (௨௩௩) தியானித்து நைவேத்யஞ்செய்து வாயுகோஷ்டத்தில் தேவதேவனைபூஜிக்கதேவதேவர்பால்வர்ணமாயும்அஞ்சலி அக்ஷமாலைபாசம் (௨௩௪) ஒருமுகம்மூன்றுகண் விபூதிஉருத்திராக்காலங்கிருதராய் தியானித்து ஆவாஹித்து நைவேத்யதூபதீபங்கொடுத்து (௨௩௫) கபாலியை ஸௌம்யதேசத்தில் விதிப்படி பூஜித்து கபாலியை கிருஷ்ணவர்ணமாயும் பாசம் அக்ஷமாலை உள்ளவனாயும் (௨௩௬) ஒருமுகம் அஞ்சலிஹஸ்தம் கிரீடமகுட முடையவனாயும் தியானித்து விசேஷமாக நைவேத்தியாதிகளை கொடுக்கவேணும்(௨௩௭) ஈசான

கோஷ்டத்திலீசானனை பூஜிக்க ஈசானம் இந்திர நீலவர்ணமாயும் ஒரு முகமும் அஞ்சலி (உ௩அ) பாசம் அக்ஷமாலை பஸ்மருத்திராக்கதாரியாய் தியானித்து ஆவாஹித்து நைவேத்ய தூபதீபங்கொடுத்து (உ௩௯) இந்தகோஷ்டத்திலேயே ஒன்பது ரத்னங்களைவைத்து வாமைமுதலிய ஒன்பது சக்திகளை பூஜித்து (உ௪௦) நைவேத்யதூபதீபங்கொடுத்து பூஜித்ததிரவியத்தை யாகத்தின்பொருட்டு இரண்டு பாகமும் (உ௪௧) அபிஷேகத்தின் பொருட்டொரு பாகமும் ஆச்சார்யரின் பொருட்டிரண்டு பாகமும் இருத்துக்களின் பொருட்டொருபாகமும் வேதாத்யயனத்தின் பொருட்டொருபாகமும் (உ௪௨) தானதக்ஷிணையின் பொருட்டொருபாகமும் உத்தம பிராம்மணபோஜனத்தின் பொருட்டொருபாகமும் பரிச்சாரக சில்பி (உ௪௩) மற்றுமெல்லாதாஸிதாஸர்களுக்கும் ஒரு பாகமும் யாகதிருவ்யம் ஒருபாகமும் இந்த பிரகாரம் திருவ்யவிநியோகஞ்செய்தல்வேண்டும் (உ௪௪) இவ்வாறு சிவார்ப்பணஞ்செய்யாதிருப்பாறுயின் அவனுக்குச்சேர்ந்த சொத்தாய் சிவபெருமானுக்குசொந்தமல்லாது போய்விடும். அவன்சொத்தால் சிவபுண்யஞ்செய்யப்புகுவாராயின் (உ௪௫) பரார்த்ததோஷமுண்டாய் சிவபுண்யம் நிஷ்பலத்தையடையும் இதினால்ஸர்வபிரயத்தினத்தினாலும்பிரதிஷ்டைக்கு முன் திருவ்யத்தை சிவார்ப்பணஞ்செய்தல் வேண்டும் (உ௪௬) இவ்வாறு காமிகாகமம் பிரதிஷ்டாதந்திரக்கிரியாபாதம் தனபூஜை திருவ்யபாகவிதி என்கிற பெயரையுடைய ஏழாவதுபடலம் முற்றிகைபெற்றது ஸ்லோகம் (உ௪௭) ஆகஸ்லோகம்—௩௫௦௬.

---

## திரிவ்யஸம்ஸ்காரம் கூறப்படுகிறது

இதின்பின் திருவ்யஸம்ஸ்காரத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. ஸம்ஸ்காரமில்லாத யாதொரு திருவ்யமானது பூஜைமுதலியவைகளில் நீக்குதல்வேண்டும் (௧) பிரதிஷ்டையின்பொருட்டு சேகரித்திருக்கும் எல்லா திருவ்யங்களையும் ஸம்ஸ்கரித்தல்வேண்டும் ஸர்வஸாதகர் ஆச்சார்யர் போதகர் (உ) ஸாதகர் மூர்த்தியின் இவர்களோடுகூட நல்ல முஹூர்த்தத்தில் ஸாமான்யவிசேஷமாகிய இரண்டு ஸந்திகளைச்செய்து புசிக்காது (௩) யஞ்யலதனங்களாலலங்கரித்துக்கொண்டு கைகால்களை அலம்பி சுத்திசெய்து ஆசமனஞ்செய்து (௪) மஹாமண்டபத்தில் ஈசானமந்திரத்தால் கூர்மாஸனத்திலாவது சுகாஸனமாகவாவது வடக்குநோக்கி யுட்கார்

ந்து (௫) அஸத்பாவத்தைப் போக்கத்தக்கஸகளீகாணஞ்செய்தல் வேண்டும் ஸகளீகரணஞ்செய்யாவிடில் அந்தகர்ம்மம் பயனற்றதாகும் (௬) ஆத்மாபசுரூபமாயிருத்தலால் கையும் பசுரூபமாகும் ஆத்மா ஸதஸத்ரூபமும் சிவபெருமான்ஸத்ரூபமாயிருத்தலால்(எ) சிவபெருமானுக்கு ஸதஸத்ரூபமான ஆத்மாவிஜாதிகமாகும் விஜாதியால் ஐக்கமின்மையும் ஸஜாதியாலேய்க்கமுமுண்டாகும் (அ) நிமித்தமுபாதானம் ஸமவாயமென இம்மூன்றும் எல்லாகார்யங்களுக்கும் காரணமெனக் கூறப்படும் (௯) சிவகைங்கர்யமாகியகார்யங்களுக்கு ஆத்மாநிமித்தனும் உபாதானஞ்சரீரமும் கைகள் ஸமவாயகாரணங்களுமாகும் (௧0) இந்த மூன்றுபேதங்களும் சிவாகாரமாய்கற்பித்தல் வேண்டும் அசிவமாயிருந்து செய்யுங்கார்யம் அமங்களமாய் முடியப்பெறும் (௧௧) ஆத்மாவை பூதசுத்தியால் சிவாகாரமாக்குதலும் அங்கன்யாஸத்தால் சரீரத்தைச் சிவாகாரமாக்குதலும் கரன்யாஸ்த்தால் கைகளைச் சிவாகாரமாக்குதலும் வேண்டும் (௧௨) இம்மூன்றும் சிவரூபமாகுதலால் ஆத்மாவுக்கு ஸதஸத்ரூபம் நீங்கி ஸத்ரூபமாகும். இவ்வாறு சிவத்வமடைந்து சிவபூஜை முதலியவைகளைச் செய்தல் எல்லாமங்களங்களையும் கொடுக்கும் (௧௩) இதினால் ஸர்வபிரயத்னங்களினாலும்ஸகளீகரணஞ்செய்தல் வேண்டும பசுபாவத்தைப் போக்கி பதிஞானமுண்டாதற்குக்காரணமான (௧௪) சிவாஸ்திரத்திலுண்டான சிவாக்னியில் பசுஸ்வரூபமான ஹஸ்தங்களை பொசிக்குதல்வேண்டும். சிவாஸ்திராயஹூம்பட் என கைத்தலத்தை (௧௫) கீழும் மேலுங் கிரமமாய் இடது கை தொடங்கி மூன்று தடவை கட்டைவிரலையும் அணி விரலையுஞ் சேர்த்து (௧௬) மற்றவிரல்களை நீட்டி கைகளை பொசிக்கியதாய் பாவித்தல்வேண்டும் சக்தயே வௌஷடென புருவமத்யம்வரை அஞ்சலிசெய்க (௧எ) சக்திமண்டலத்தில்அமிருதமிருப்பதாய்இந்த அமிருதத்தால்பொசிக்கிமிருதமானகைகள் திரும்பஉண்டானதாகப்பாவிக்க இவ்வாறு பசுபாவத்தை நீக்கல் பதிஸஜாதித்வமுண்டாகும்(௧அ) இனமுற்ற ஸத்பாவத்தைச் செய்து இந்தக்கையில் சுண்டிவிரல்முதல் நடுவிரலின்ள பர்வாக்களில் (அதாவது இரைகளில்) (௧௯) சிவாஸனம் சிவமூர்த்தி சிவமூலத்தை கட்டைவிரல் நுனியால் இரண்டுகைகளிலும் ஆவாஹித்து (௨0) ஈசானம் முதல் ஸத்யோஜாத மிருதியை

விரல்நுனிகளில் ஆவாஹித்தல்வேண்டும். கட்டைவிரல்நுனியில்
தர்ச்சனிவிரல், (அதாவது ஆள்காட்டிவிரல்) நுனியில் ஈசானமூர்
த்தாயநமஹ எனத்துடைத்து (உக) தர்ஜனிவிரல் முதல் கடைவி
ரலி றுதியாக கட்டைவிரல் நுனியால் துடைத்தல்வேண்டும். தர்ஜ
ன்யக்ரத்தில் தத்புருஷமந்திரத்தாலும் மத்யமாக்ரத்தில் அ
கோரமந்திரத்தாலும் (உஉ) அனாமிகாக்ரத்தில் வாமதேவமந்தி
ரத்தாலும் கடைவிரலின் நுனியை ஸத்யோஜாத மந்திரத்தாலு
ன்யசித்து கடைவிரல் நடு இறையில் வித்யாதேஹத்தை கட்டை
விரல்நுனியில் நியஸித்து (உங) இந்த வித்யாதேஹம் ஞானமய
மான சரீரமாய்ப்பாவித்து சிவமூலமந்திரத்தை நியஸித்து நேத்
ரேப்யோநம: என (உச) நேத்திரமுத்திரைகொடுத்து இரண்டுஹ
ஸ்தங்களிலும் சக்திவியாப்யமாயும் (உரு) இந்தஸ்தானத்தில் சிவ
வ்வியாபகமாயும் எல்லா பர்வங்களிலும் சிவவியாபகம்பாவிக்க
சுண்டிவிரல்முதல்கட்டைவிரல்வரை (உசு) கட்டைவிரல்நுனியால்
ஹிருதயமந்திரம் முதல் கவசமந்திரம்வரை தர்ச்சனிவிரல்வரை
நியஸித்துதர்ச்சனிவிரல்நுனியால் கட்டைவிரலில் அஸ்திரமந்திரத்
தை நியஸித்து (உஎ) கவசமந்திரத்தால் அவகுண்டனம்தர்ச்சனி
விரலைநீட்டிச்சுற்றிஅமிருதீகரணத்தின்பொருட்டு தேனுமுத்திரை
காட்டுக (உஅ) சிவாயவௌஷடு என பரமீகரணஞ்செய்தல்வேண்
டும். சிரஸிற்குமேல் அஞ்சலிசெய்து ஹிருதயம்வரை இதைக்கொ
ண்டுவருதல்(உகூ) பரமீகரணமாகும். இனியொருபிரகாரம் கையை
அபயவரதஹஸ்தமாய்க் காட்டுவது பரமீகரணமென்பதாம் (ஙO)
இனி அங்கன்யாஸம் கால்கட்டைவிரலிலிருந்து சிரஸுவரை சி
வாஸ்திரமந்திரமுச்சரித்து மும்முறைதுடைத்தல்வேண்டும் (ஙக)
புருவமத்யம்வரையில் சக்திமந்திரத்தால் அஞ்சலிசெய்துதஹ
ப்லாவன மமிருதாப்லாவனஞ்செய்து கட்டைவிரலையும் அணிவிர
லையும்ஒன்றுசேர்த்து (ஙஉ) மற்றவிரல்களைநீட்டி ஹிருதயத்தில்சி
வாஸனத்தையும் புருவமத்யயில்சிவமூர்த்தியையும் சிரஸில்சிவமூ
லத்தையும் நியஸித்து (ஙங) மூர்த்தாவில் ஈசான மந்திரத்தைக்
கட்டைவிரலால் நியஸித்து முகத்தில் தத்புருஷ மந்திரத்தை
தர்ஜநீவிரலால் நியஸித்து (ஙச) ஹிருதயத்தில் அகோரமந்திரத்
தை மத்யமவிரலால் நியஸித்து அனாமிகையால்வாமதேவமந்திரத்
தை குஹ்யத்தில்நியஸித்து (ஙரு) பாதங்களில் ஸத்யோஜாதமந்தி
ரங்களைகடைவிரலால் நியஸித்து கட்டைவிரல் அணிவிரல்இரண்டி

ஷைபிஹுங்கட்டி (௩௬) ஹிருதயத்தில் வித்யாதேஹ மாவாஹித்து நேத்திரமந்திரத்தால் நேத்திரத்தில் நேத்திரமுத்திரையால்நியஸி த்து (௩௭) சிவாயநமவென ஹிருதயத்தில்முன்போல் நியஸிக்க இதுமூலமந்திரமாகும் இதைநியஸிக்க சரீரம்ஆலயமாகும் (௩௮) கடைவிரல்முதல்தர்ஜனிவிரல் வரையில் ஹிருதயமந்திரத்தை ஹிருதயத்தில் கடைவிரலால் நியஸித்து சிரோமந்திரத்தைசிரஸில்அ ணிவிரலால் நியஸித்து (௩௯) சிகாமந்திரத்தை சிகையில்மத்யமவி ரலால்நியஸித்து கவச்சமந்திரத்தால் தெற்குஸ்தனந்தொடங்கிவா மஸ்தனம்வரை கிரமமாய் (௪0) கழுத்தை வலக்கை தர்ச்சனிவிர லை நீட்டிச்சுற்றுதல்வேண்டும் அஸ்திராயநம: எனமும்முறைங்கை கொட்டி (௪௧) சிரஸைச்சுற்றிலும் சோடிகாமுத்திரையால் திக் பந்தனஞ்செய்க சிரஸில் கவசமந்திரத்தால்அவகுண்டனஞ்செய்து (௪௨) வௌஷடந்த மூலமந்திரத்தால் பரமீகரணஞ்செய்க இதுவ ரை சகளீகரணம் சொன்னோம் ஸமான்யார்யக்கியம் கேட்பாயாக (௪௩) மேற்குநுனியாய் ஐந்து தர்ப்பையை பரத்தி இதற்குமேல் ஸாமான்யார்க்யபாத்திரத்தை அந்தந்த திருவ்யத்தோடு (௪௪) ஸா மான்யார்க்யம் தங்கம் அல்லது வெள்ளி அல்லது தாமிரம் இவை களி லெதுவாவதொன்று வைத்து சந்தனம் அக்ஷதை புஷ்பம் (௪௫) தர்ப்பை நுனியவை அருகு முதலிய திருவ்யங்களை ஸாமா ன்யார்க்ய பாத்திரத்தில் போட்டு ஜலத்தை பூரித்து (௪௬) பிரண வத்தால் ஏழுதடவை பூஜித்து. யவை அரிசி, பாசிப்பயறு, கட லை, உளுந்து, கோதுமை, துவரை (௪௭) எள்ளு இவை முதலிய ஏழு தான்யங்களை கிரமமாய் ஆஸனரூபமாய் பரத்தி இதற்குமேல் பத்மமண்டலங்கற்பித்து (௪௮) மஞ்சள் தடவிய இரண்டு தேங்கா ய் யவை அரிசிபழம்(௪௯)வெல்லம் தாம்பூலம் தங்கம் வெள்ளி சந் தனம் புஷ்பம் அக்ஷதை பத்திரம் தர்பை பவித்திரம் (௫0) மஞ் சள் மாவிலை கூர்ச்சம் பட்டு தூபம் தீபம் முதலிய திருவ்யங்களை தங்கப்பாத்திரத்தில் வைத்து (௫௧) பத்மமண்டலத்தின்மேல் பா த்திரத்தை வைத்து ஸாமான்யார்க்ய ஜலத்தால் அஸ்திரமந்திரத் தால் ஏழுதடவை புரோக்ஷித்து (௫௨) நிரீக்ஷணாதி ஐந்து சுத்தி செய்து யவையில், விருஷபத்தையும் (௫௩) அரிசியில் மாதாவை யும், பாசிப்பயரில் வருணனையும், உளுந்தில் அக்னியையும், கோது மையில் சந்திரனையும், (௫௪) துவரையில் சோமனையும், எள்ளில் மாகேசுவரியையும், இந்த ஆஸனரூபமான ஏழு தான்யங்களையும்,

பூஜித்தல்வேண்டும், (௫௫) விருஷபம் வெள்ளியின்வர்ணம், நான்குபாதம் ஊர்த்துவமுகம் கொம்பு அருணவர்ணம் கிங்கிணியால் அலங்கரிக்கப்பட்டதாய்த் தியானிக்க, (௫௬) மாதா வெண்மைநிறம் ஒருதலை நான்குகை, கத்தரி, கோடரி. சூலம், கபாலம், இவைகளோடு கூடியதாய் தியானிக்க, (௫௭) வருணன் இரத்தினகாந்தி நாகபாசம்தரித்து ஒருமுகம், இரண்டுகண், முதலையின்மேலிருப்பதாய் தியானிக்க, (௫௮) அக்னி ஏழுதலையும், அக்ஷமாலை, அக்நிஜ்வாலைமயமாய் இரக்தவர்ண்ணமாய் சக்தியை கையில் உடையதாய் ஆட்டின்மேலேறியிருப்பதாய் தியானிக்க, (௫௯) இந்திரன் ஐராவதமென்னும் யானையில் ஏறியிருப்பவனாய் ஸ்வர்ண்ணவர்ணம், கிரீடம், ஆயிரம்கண், சக்கரம், வஜ்ரம், இவைகளை கையில் உடையவனாய் த்யானிக்க, (௬0) ஸோமன், ஸிம்ஹாஸனத்திலேறியிருப்பவனாய் நல்லமுகமாய் இரண்டு வல இடக்கைகளில் நீலோத்பலம் முடையவனாய் தியானிக்க, (௬௧) மாஹேசுவரீ நீலவர்ண்ணம் ஒருமுகம் நான்குகை அபயவரதம் இரண்டுகைகளில் தாமரைப்பூ தரித்திருப்பதாய் தியானிக்க, (௬௨) பாத்திரத்தின் அடி, நடு நுனிகளில் ஆத்மதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவம், இவைகளையும் இற்றிற்கு அதிபதிகளையும் (௬௩) அந்தந்த தியானத்தோடு பூஜித்து பாத்திரத்திற்குமேல் சலாஸனத்தை பூஜிக்க (௬௪) அரிசியில் நக்ஷத்திரத்தை தியானத்தோடு பூஜித்தல்வேண்டும் நக்ஷத்திரம் ஸ்படிகவர்ணம் இரண்டுகை ஒருதலை (௬௫) அஞ்சலிஹஸ்தம் விபூதி உருத்திராக்ஷாலங்கிரதமாய் தியானிக்க தேங்காயில் அமிருதத்தை பூஜிக்க (௬௬) அமிருதம் வஜ்ஜிரகாந்தி இரண்டுகை ஒருதலை அஞ்சலிஹஸ்தம் விபூதி உருத்திராக்ஷபூஷிதமாய் தியானிக்க (௬௭) பழங்களில் விஷ்ணுவை பூஜிக்க விஷ்ணு ஸ்படிகவர்ண்ணம் நான்கு கை (௬௮) வரதம், அபயம், சங்கு, சக்கிரம், தரித்தவராய் தியானிக்க, வெல்லத்தில் வசுவை பூஜிக்க (௬௯) வசு, அருணவர்ண்ணம் இரண்டுகை அஞ்சலிஹஸ்தம் ஒருமுகம் மூன்றுகண் ஜடாசூடம், உடையவராய் தியானிக்க (௭0) இவ்வாறு தியானித்து தாம்பூலத்தில் மஹாலக்ஷ்மியை பூஜிக்க வலதுகை இடதுகைகளில் வில்வப்பழத்தைத் தரித்திருப்பவளாய் (௭௧)ஸ்வர்ணவர்ணமுடையவளாய்மகுதைசுவர்யத்தைக்கொடுக்கத் தக்கவளாய்த்யானிக்கமஞ்சளில் வஸுந்தரியைப்பூஜிக்க (௭௨) வ

ஸுந்தரை பச்சைவர்ணம் ஒருமுகம் இரண்டுநேத்ரம் அஞ்சலிஹஸ்தம் ஸர்வாபரணபூஷிதையாய்(௭௩) த்யானிக்க தங்கத்தில் தனலெக்ஷ்மியைப்பூஜிக்க தனலக்ஷ்மிபால்வர்ணம்தாமரைப்புஷ்பம் போன்ற நேத்ரங்கள் (௭௪) அஞ்சலிஹஸ்தம் ஒருதலை நல்லயௌவ்வனமுடையவளாய் த்யானிக்க வெள்ளியில் ம்ருடானியைப்பூஜிக்க(௭௫) ம்ருடானி ஸ்வர்னவர்னம் இரண்டுகைகள்மகுடம் ஸர்வாபரணபூஷிதையாய்த்யானிக்க (௭௬) மாவிலைக்கொத்தில் வைஷ்ணவியைப்பூஜிக்க வைஷ்ணவிச்யாமளவர்ணம் ஒருமுகம் இரண்டுகைகள் சங்குசக்ரம் ஸமஸ்த ஆபரணங்களையுமணிந்தவளாய் (௭௭) த்யானிக்க தர்ப்பைகளில் ப்ரும்ஹாவை பூஜிக்க ப்ரும்ஹா நான்குமுகம் பசுமைவர்ணம் நான்கு கைகள் (௭௮)ஸ்ருக்குதண்டம் குண்டிகை அக்ஷமாலைக்ரீடம் ஹம்ஸவாஹனத்திலேறியிருப்பவராய் த்யானிக்க பவித்திரத்தில் போகினியைப்பூஜிக்க (௭௯) போகினி பால் வர்ணம் ஒரு முகம் இரண்டு கைகள் தாமரைமலரின்மேலிருப்பவளாய் இரண்டு கைகளிலும் தாமரை மலர் நல்லயௌவனமுடையவளாய்(௮௦)த்யானிக்ககூர்ச்சத்தில்கங்கையைப் பூஜிக்க கங்கைவெண்மைநிறம் ப்ரஸன்னமுகம் மனோக்யமானதுடைஜகனஸ்தலம்(௮௧) ஒருமுகம் இரண்டுகைகள் எல்லாஆபரணங்களையுமணிந்தவளாய்த்யானித்து புஷ்பத்தில் ஸரஸ்வதியைப் பூஜிக்க (௮௨) ஸரஸ்வதி வெண்மைவர்ணம் வெள்ளைவஸ்திரம் வலதிடக்கைகளில் அக்ஷமாலை புஸ்தகம் ப்ரஸன்னமானமுகமுடையவளாய் (௮௩) த்யானிக்க தூபத்தில் அக்னியைப்பூஜிக்க அக்னிஎழுசிரம் அக்ஷமாலைகமண்டலம்(௮௪) ஜ்வாலை ரக்த்தவர்னம் சக்த்திஹஸ்தம் ஆட்டின்மேலிருப்பவராய் த்யானிக்கதீபத்தில் ஸூர்யனைப்பூஜிக்க(௮௫)வெண்டாமரை மலரின்மேலிருப்பவராய் ரக்தவர்ணமாய் மஹாதேஜஸ்ஸோடு கூடினவராய்வ்ருத்தமண்டலநடுவிலிருப்பவராய்(௮௬) வெண்டாமரை இரண்டுகையிலுடையவராய் ஒருமுகம்இரண்டு நேத்திரம் சிவப்புவஸ்திரம் தரித்திருப்பவராய்(௮௭)த்யானித்துமணியில் உருத்திரனைப்பூஜிக்க உருத்திரன் ஐந்து தலைபதினைந்துகண்பத்துக்கைசந்திரப்ரபைதரித்தவராய்(௮௮)வ்ருஷபவாஹனத்தின் மேலிருப்பவராய் சந்திரவர்ணமுடையவராய் த்யானித்து இவர்கள் யாவருக்கும் நிவேதன தூபதீபாராதனைகள்செய்து அசூபரிசாரகனை அழைத்து தீக்ஷையில்லாதவனாயிருந்தா லுடனே சாக்ஷுஷீதீக்ஷைசெய்து அவனது சிரத்தில் (௯௦) அர்க்யஜலத்தால்

அஸ்த்ரமந்திரமுச்சரித்து ப்ரோக்ஷித்து சலாஸனம் பூஜித்து சந்த
னுக்ஷதைபுஷ்பங்களினுலே(௯௧) அலங்கரித்து நெற்றியில் விபூதி
யாலடித்து பரிசாரகனனுசிரசில் பூஜித்தபாத்திரத்தை அசையாது
(௯௨)மூலமந்திரத்தால் வைத்து வேதகோஷம் ந்ருத்தம் கீதம் ம
ற்றுமுண்டான வாத்யகோஷத்தோடு மெள்ளமெள்ள (௯௩) ஆல
யப்ரதக்ஷிணஞ்செய்து ஸ்தபநமண்டபத்தில் கூர்மாஸநத்திலாவது
அல்லது ஸிம்ஹாஸநமாகவாவது (௯௪) உட்கார்ந்து முதலில்ஆச்
சார்யானுக்ஞைசெய்தல்வேண்டும். அன்யர்களனுக்ஞைசெய்தல்கூ
டாது செய்தால்கர்த்தாநாசத்தையடைவன் (௯௫) அனுக்ஞைஎ
ண்வகைப் பேதமுடைத்து இவற்றுள், ஸாங்கம், உபாங்கம், ப்ரத்
யங்கமென மூன்றுபேதங்களாகும் (௯௬) ஆஸ்தானரூபமான பர
மேசுவரர் ஆச்சார்யரை அதிஷ்டித்து ஜகத்திற்கு எல்லாஅனுக்
ரஹத்தையுஞ் செய்கின்றுரெனச் செப்புவதால் (௯௭) ஆச்சார்ய
னுக்கு ஜெகத்குருத்வம் கூறப்படுகின்றது இதனுல் ஆச்சார்யன்
சிவ பெருமானுக்கு ப்ரத்யங்க சரீரமாயிருத்தல் பற்றிமுதலில் ஆச்
சார்யானுக்ஞை, செய்தனுரித்தாயின (௯௮) விக்னேசர், தக்ஷிணு
மூர்த்தி, ஸுப்ரமண்யர், நந்திகேசர், சண்டிகேசர், இவ்வைந்
து தேவர்களும் சிவபெருமானுக்கு உபாங்கமூர்த்தியெனக் கூறப்
படும் (௯௯) ஸாங்கம், சிவசக்தியென, கூறுதலால் அனுக்ஞை,
எண்வகைப்பேதங்களாயின வலதுகண், இடதுகண் நெற்றிக்கண்,
இந்த மூன்று கண்களாய் (௧௦௦) கணேச சுப்பிரமண்ய தக்ஷிணு
மூர்த்தி, இம்மூன்று மூர்த்திகளும் ஆகும், நந்திகேசர், மூக்காக
வும் சண்டிகேசர், காதாகவும், கூறப்படும் (௧௦௧) இந்த பிரகாரமா
ய், அனுஞை எட்டுபேதங்களாகும், இவற்றுள் முதலில் ஆசாரிய
அனுஞையும் இரண்டாவது விக்கினேசுவரர், (௧௦௨) மூன்றுவது
தக்ஷிணுமூர்த்தி நான்காவது, சுப்பிரமண்யர், ஐந்தாவது, சிவபெ
ருமான், ஆறுவது, சக்தி (௧௦௩) ஏழாவது, நந்திகேஸ்வரர் எட்
டாவது, சண்டிகேஸ்வரர், இவ்வாறு எட்டு மூர்த்திகளின், அனு
ஞைகள் புனராவர்த்தன,கும்பாபிஷேகத்தில் செய்யதக்கது(௧௦௪)
இவ்வாறு செய்யாவிடில் கர்த்தாநாசத்தை அடைவன் சாங்கா அ
னுஞை உத்ஸவத்திலும் பரிவாரர்பிரதிஷ்டையில் (௧௦௫) உபாங்
கா அனுஞையான அந்தந்ததேவதைகளின் அனுஞையும் தீக்ஷை
யில்பிரத்திங்க அனுஞையெனகூறப்படுகிறது (௧௦௬) எதில்முதலில்,
ஆசாரியரைத்யானித்து, அனுக்ஞைசெய்தல்வேண்டும், கோடிசர்

திரப்பிரகாசமாய் சிவஸ்வரூபராகிய சுவேதரென்னும் பெயர்கொண்ட (௧௦௭) மகாதேவரை சுபத்தைகொடுக்க முதன்மையான குருவை நான் நமஸ்கரிக்கிறேன், என பிரார்த்தித்துதேங்காய்முதலியவற்றால் அலங்கரிக்கபட்ட (௧௦௮) தங்கதாம்பாளத்தை எடுத்துக்கொண்டு எழுந்து ஈசானமந்திரத்தினால் அபிமந்திரித்து (௧௦௯) சர்வசாதகர் ஆசாரியர், சாதகர் போதர் இருத்துக்கள் இவர்கள் யாவரையும் சிவாகாரமாய் பாவித்து (௧௧௦) ஏசதசில் உள்ளவர்களே சிவாகமத்தில் கூறியவாருள்ள சிவதிரவியத்தை சொல்ப்பமாய் இருப்பினும் உள்ளபடியே இருப்பினும் (௧௧௧) பிரதிஷ்டிக்க யோக்கியதை உண்டாகும்படி அனுக்கிரகம் செய்யவேண்டுமென பிரார்த்தித்து சந்தனம் அக்ஷதை புஷ்பம் தாம்பூலம் தெக்ஷிணை இவைகளினாலே (௧௧௨) இவர்களுக்கு சந்தோஷம் உண்டாகும்படி செய்து சங்கல்ப்பம் செய்து புண்யாஹவாசனத்தின்பொருட்டு (௧௧௩) விக்நேசபூஜைசெய்துபுண்யாஹவாசனம்செய்தல்வேண்டும் ஸ்நபனமண்டபத்தின் முதலில் புண்யாகவேதி போடுதல்வேண்டும் (௧௧௪) ஒருமுழ விஸ்த்தாரமும் இதில்பாதி உயரமும் மேலும் கீழும் பட்டிகையோடு கூடியதாய் வேதிகை கற்பித்தல்வேண்டும் (௧௧௫) ஓன்பதுபடி நெல்லும் இதில்பாதி அரிசியும் இதில்பாதி எள்ளும் பொரிதர்ப்பை புஷ்பங்களைப் பரத்தி (௧௧௬) இதின்மேல் எட்டிதழ்கர்ணிகையோடுகூடியபத்மமண்டலம் கர்ப்பித்து இதின்மேல் (௧௧௭) வடக்குநுணியாகவும் கிழக்குநுணியாகவும் தர்ப்பையைப் பரதி தங்கத்தால் செய்யப்பட்ட கும்பத்தை நூல்பட்டு முதலியவைகளால் அலங்கரித்து [௧௧௮) மாவிலை தேங்காய் ரத்னம் தங்கதாமரைப்பூ தங்க பிரதிமை (௧௧௯) சந்தனாக்ஷதபுஷ்பங்களினால் அலங்கரித்து கர்ணிகைக்கு நடுவில் வருணகும்பத்தை வைத்து (௧௨௦) இதற்கு இடப்புறத்தில் ஹரிஷிணி என்னும் சக்திகும்பத்தை வைத்து (௧௨௧) இதற்குவெளியே விஷ்டறங்களைப் போட்டு இதற்கு வெளியே கூர்ச்சங்களை ஸ்தாபித்து இதற்கு வெளியே பரிஸ்தாணம் போடுதல்வேண்டும் (௧௨௨) எல்லாகும்பங்களுக்கும் அந்தகூர்ச்சம் லம்பகூர்ச்சம் விதிப்படி போடுதல் வேண்டும் (௧௨௩) மத்தியில் வருணனைச் சக்திகமாய் பூஜித்தல் வேண்டும் சாமான்யார்க்கியம்வைத்து அந்த ஜலத்தினால் (௧௨௪ எல்லா திரவியங்களையும் புரோக்ஷித்து நிரீக்ஷணாதி பஞ்சசுத்தி செய்து நெல்லில் சந்திரனையும் (௧௨௫) ஹருஷிணியும் அரிசியில்

கத்திரத்தையும் எல்லா திருவியங்களிலும் அமிர்தத்தையும் க லசத்தின் பின்புரத்தில் (௧௨௬) பிர்மாவையும் நடுவில் விஷ்ணுவை யும் நுனியில் ருத்திரனையும் கும்பத்தில் சலாசனமும் (௧௨௭) இ தற்குமேல் வருணனை ஆசனமூர்த்திமூலத்தால் பூஜிக்க வருண ன் சந்திரவர்ணம் இரண்டுகைகள் அஞ்சலிஹஸ்தம் (௧௨௮) முத லையின்மேலிருப்பவராயும் விபூதிருத்திராக்ஷதாரணமுடையவரா ய் த்யானிக்க சிரசில் திவ்யதேகத்தையும் (௧௨௯) இருதயம் சிரசு, சிகை, கவசம் அஸ்த்தரம் நேத்திரம் இந்த ஆறுமந்திரங்களால் அந்தந்த முத்திரையோடு பூஜித்து (௧௩0) வருணன் சந்திரகாந்தி ஒருமுகம் இரண்டுகண்கள் வலம் இடக்கைகளில் நாகம் பாசம் (௧௩௧) முதலையின்மேல் இருப்பவராய் விபூதிருத்திராக்ஷதாரண முடையவராய் த்யானித்து நெய்வேத்திய முதலியவைகளை செய் ய்து (௧௩௨) இதற்கு இடதுபுரத்தில் ஹர்ஷணிசக்தியை பூஜிக்க ஹர்ஷணி பச்சவர்ணம் மனோக்கியமான துடை நிதம்பம் (௧௩௩) ஒருமுகம் இரண்டுகைகள் பத்மம் நீலோத்பலம் இவைகளை கைக ளிலுடையதாய் த்யானித்து நெய்வேத்திய தூபதீபங்கொடுத்து (௧௩௪) இந்தப்பிரகாரம் முதலாவர்ணத்தை பூஜிக்க இரண்டாமா வர்ணம் கும்பத்தைசுற்றிலும் (௧௩௫) கிழக்கே கங்கையை சசக் திகமாய் பூஜிக்க கங்கையை சம்பகவர்ணம் மனோக்யமான துடை (௧௩௬) வெந்தாமரை புஷ்பத்தின்மேல் யிருப்பவளாய் மேற்படி புஷ்பம் அணிந்தவளாய் த்யானித்து ஆக்னேயதிக்கில் யமுனையை பூஜிக்க (௧௩௭) யமுனை வெளுப்புவர்ணம் இரண்டுகைகள் இரண்டு தாமரைப்பூ தரித்திருப்பவளாய் ஒருமுகம் இரண்டுகண்கள் எல்லா ஆபரணங்களும் அணிந்திருப்பவளாய் (௧௩௮) த்யானித்து தெற் க்குதிக்கில் கோதாவரியை பூஜிக்க கோதாவரி வெளுப்புவர்ணம் ஒருமுகம் இரண்டுகைகள் (௧௩௯) பத்மாஸனம் வெண்தாமரைப் பூ மாலையுடையவளாய் த்யானித்து நிருதிதிக்கில் சரஸ்வதியை பூஜிக்க (௧௪0) சரஸ்வதி வெளுப்புவர்ணம் வெளுப்புவஸ்திரமணி ந்தவளாய் ஒருமுகம் இரண்டுகைகள் புஸ்தகம் அக்ஷமாலை தரித் திருப்பவளாய் (௧௪௧) த்யானித்து மேர்க்குதிக்கில் நிர்மதையை பூஜிக்க நிர்மதை இந்திரநீலவர்ணம் ஒருமுகம் இரண்டுகைகள் (௧௪௨) தாமரைப்பூ நீலோத்பலம் மகுடம் முதலியவற்றால் அலங் கரிக்கப்பட்டவளாய் த்யானித்து வாயுதிக்கில் சிந்துவை பூஜிக்க (௧௪௩) சிந்து ஸ்படிகவர்ணம் புஷ்பம் நீலோத்பலம் ஒருமுகம் இர

ண்டுகண்கள் எல்லா ஆபரணங்களும் அணிந்தவளாய் (௧௪௪) த்யா னித்து வடக்குதிக்கில் காவேரியை பூஜிக்க காவேரி ஸ்வர்ணவர் ணம் ஒருதலை இரண்டுகைகள் (௧௪௫) அஞ்சலிஹஸ்தம் எல்லா ஆ பரணங்களும் அணிந்தவளாய் த்யானித்து ஈசானதிக்கில் குமாரி யை பூஜிக்க (௧௪௬) குமாரி ஸ்வர்ணவர்ணம் ஒருமுகம் இரண்டுகை கள் அஞ்சலிஹஸ்தம்எல்லா ஆபரணங்களும்அணிந்தவளாத்யானி த்து (௧௪௭) இவர்கள் யாவர்க்கும் நெய்வேத்தியதூபதீபம்செய்து திருதியாவரணம்விஷ்டரத்தை சுற்றிலும்கிழக்கு திக்கில்(௧௪௮) சோமனேயும் ஆக்னேயதிக்கில் உப்புசமுத்திரத்தையும் தெற்குதி க்கில் கருப்பஞ்சார் சமுத்திரத்தையும் நிருதிதிக்கில், சுராசமுத்தி ரத்தையும் (௧௪௯) மேற்குதிக்கில், நெய்சமுத்திரத்தையும் வாயு திக்கில் தயிர்சமுத்திரத்தையும், வடக்கில் பார்கடலேயும் ஈசானத் தில் நல்ஜலமுள்ள சமுத்திரத்தையும் (௧௫௦) இவைகளுக்கு நெ ய்வேத்யதூபதிபாதிகளை செய்து, நான்காமாவர்ணம் கூர்ச்சத்தை சுற்றிலும் (௧௫௧) இந்திரன்முதல் விஷ்ணு இருதியாகலோகபால ர்களை பூஜித்து ஐந்தாமாவர்ணம் பரிஸ்த்தரணத்தை சுற்றிலும் (௧௫௨) வஜ்ரம்முதல் சக்கிரம்வரையில் பூஜித்து, நெய்வேத்தியதூ பதிபம்செய்து(௧௫௩) புஷ்பாஞ்சலிசெய்து தத்வாயாமிஎன்றும் மந்திரத்தால்ஸ்தோத்திரம்செய்து வருணையநமஹாஎனவும்(௧௫௪) அபாம்பதயே எனவும் சசாங்கதவளப்ரபா எனவும் நாகஹஸ்தா எனவும் பாசஹஸ்தா எனவும் (௧௫௫) ரத்நகாந்திநிபா எனவும், மகரத்வஜாயெனவும், மகராரூடாஎனவும் (௧௫௬) பூஜித்து, நை வேத்தியாதிகள் செய்து குமபத்தைச் சுற்றிலும் ஆசாரியர், சாத கர் (௧௫௭) ருத்துக்களோடுகூட கூர்மாசனத்திலாவது அல்லது சுகாசனமாகவாவதுஉட்கார்ந்து நுனியுள்ள நூத்திஎட்டு(௧௫௮) அல்லது ஐம்பது அல்லது இருபத்தைந்துதர்பைநுனியால், கும் பத்தின்மேல், தொட்டு இருக்கும்படி ஆசாரியன்செய்து பவத்பி ரஸாதத்தியாத (௧௫௯) புண்ணியாஹ :ாசயிஷ்யதெனை ஆசாரியன் கூற சுவாச்சியதாம் என போதகர் முதலினோர் ப்ரதிவசனம் கூற (௧௬௦) இந்தப்ரகாரம் வருணத்தோத்திரசெய்து தோத்திரமுடிவி ல் மூலமந்திரத்தை ஆயிரம் அல்லது, ஐநூரு, (௧௬௧) அல்லது இ ருநூற்று ஐம்பதாவது செய்து பரான்முகார்க்யம் கொடுத்து வரு ணனைவிசர்ச்சனம் செய்து இந்தஜலத்தினால் எல்லா திரவியங்களின் சுத்திபின்பொருட்டு (௧௬௨) ப்ரோக்ஷித்து இவ்வாறு புண்ணியா

வாசனம் கூறியிருக்கின்றது, இதுவரை புண்ணியாஹவாசனவிதி-
யை சொன்னேம் இனி பூதசுத்தியை கேட்பாயாக, (கசுரு)
இவ்வாறு காமிகாகமம் ப்ரதிஷ்டாதந்த்ரம் கிரியாபாதம் திரவியச
ம்ஸ்காரமென பேர்கொண்ட எட்டாவதுபடலமமூற்றிகைபெற்றது,
சுலோகம் கசுரு. ஆக சுலோகம் கூசுஎக.

## பூதசுத்திபடலம் கூறப்படுகின்றது.

இதின்பின் பூதசுத்தியை கூறப்படுகிரது ஆத்மஸம்ஸ்காரம் பூதசுத்தி என சொல்லப்படும் (க) ஆத்மாவுக்கு பஞ்சபூதங்கள் பின்னபின்னஸ்வரூபமாதலின் பிருதிவீ முதல் ஆகாசபர்யந்தம் ஜடபரிணமரூபமாகும் (உ) ஆத்மா தனது ஸ்வரூபமாகிய சித்ஸ்வரூபத்தை அரியாதபடி தன் வசப்படுத்தி பரிணமிக்கின்றது சிவாக்னியால் இந்த அசத்பாவத்தை பொசிக்கி சத்பாவம் செய்தல் அவசியமாதலின் முதலில்தகனபிலாவனம் செய்தல்வேண்டும்(௩) அமிர்தத்தால் திரும்ப உற்பத்திசெய்து சத்பாவமாதற்பொருட்டு அசத்பாவ நிவர்த்தியின்பொருட்டும் பூதசுத்தி கூறப்படுகிரது (௪) சிருஷ்டி ஸ்திதி சங்கார திரோபாவானுக்கிரகமென பூதசுத்தி ஐந்துபேதங்களாகும் இந்தஐந்துனுள் ஹடம் லம்பிகம்சிவராஜமென மூன்று பேதங்களாம். சிருஷ்டிமுதல் சம்ஹாரம்வரையில் ஹடயோகமும் திரோதானம் லம்பிகாயோகமும் சிவராஜம் அனுக்கிரகமுமாகும் (எ) சச்சூத்திரிகள் சிருஷ்டிகிரமத்தையும் வைசியர் ஸ்திதிகிரமத்தையும் க்ஷத்திரியர் சம்ஹாரகிரமத்தையும் பிர்ம்மசிருஷ்டாளரான (அ) பிராமணர்கள் திரோதானகிரமத்தையும் சிவசிருஷ்டாளரான பிராமணர்கள் அனுக்கிரககிரமத்தையும் இதில் சொல்லியபடி பூதசுத்தியை செய்தல்வேண்டும் (௯) இதற்கு விரோதமாய் செய்வாராகில் கர்த்தாகர்மம் இவ்விரண்டும் நாசத்தை அடையும் ரேசகபூரககும்பகம்செய்து (க0) ஹலாம்என்னும் பீஜத்தை ஐந்துமுறை உச்சரித்து நிவர்த்திகலாயை நமஹ என (கக) பூஜித்தல்வேண்டும் நிவர்த்திகலைபாதம் முதல் முழங்கால்வரை என்பதரிக முழந்தாள்முதல்தொப்புள்வரைபிரதிஷ்டாகலையை (கஉ) ஹ்ரீம் என்னும் பீஜத்தை நான்குமுறை உச்சரித்து பூஜிக்க நாபிமுதல் இருதயபர்யந்தம் ஹூம் என்னும் பீஜத்தை மூன்றுமுறை உச்சரித்து (கங) வித்யாகலையை பூஜிக்க ஹிருதயம்முதல் நெற்றி

வரைபாவிக்கத்தக்கது. ஒௌம்என்னும்பீஜத்தைமும்முறைஉச்ச
ரித்தல்வேண்டும் (௧௪) சாந்திகலாயைநமஃஎனநெற்றிக்குமேல்ஹௌ
ம் என்னும்பீஜத்தை ஒருமுறையுச்சரித்து (௧௫) சாந்தியதீதகலா
யெ நமஃ எனபூஜித்து பிருதிவிமுதலாகாசமிருதியாக (௧௬) க
லாஸ்வரூபமாய்தியானித்து ஆகாசத்தினின்று வாயுவும்வாயுவினி
ன்று அக்னியும் அக்னியினின்றுஜலமும் (௧௭) ஜலத்தினின்றுபிர
திவியுமிந்தஐந்துங்கலயிலயித்ததாய் ஆகாசத்தில்லயமாக்கி (௧௮)
இதில் வியாபித்திருக்கும் ஜீவாத்மாவைகொணர்ந்து நாபிகுண்
டாக்னியில் கொளுத்தி (௧௯) சுத்தஸ்படிகபிரகாசமாய் நிர்மலமா
ய்பாவித்து அமிருதத்தால் திரும்பஉண்டானதாய் பாவிக்க (௨௦)
பிரும்மா விஷ்ணு உருத்திரர் மகேசர் ஸதாசிவர் இவர்கள்ரூபத்
தை தியானிப்பது ஸிருஷ்டிக்கிரமபூதசுத்தியென்பதாம் (௨௧)அந்
தியசைவர்கள் ஸிருஷ்டிக்கிரமபூத சுத்தியைச்செய்யத்தக்கது இஸ்தி
திக்கிரமத்தைச்சொல்லுகிறேன் கேட்பாயாக பாதம்முதல் மு
முந்தாள்வரையில் (௨௨) பிரதிவிஸ்தானமாகும் பிரணவத்தைஉச்
சரித்து ஹலாமென்னும் பீஜத்தை ஐந்து முறையுச்சரித்து நிவிரு
திகலாயெ(௨௩)பிரதிவிதத்வாயநம: என பூஜித்து தத்வாதிபரை
பூஜித்துதியானிக்க ஜானுமுதல்தொப்புள்வரையில்(௨௪)ஜலஸ்தா
னமாகும் ஓம் ஹ்ரீமெனநான்குமுறை யுச்சரித்துபிரதிஷ்டாகலா
யை (௨௫) அப்புதத்வாயநம:எனபூஜித்துதத்வாதிபரைதியானிக்
கநாபிமுதல்ஹிருதயம்வரை(௨௬)அக்னிஸ்தானமாகும் ஓம்ஹ்ரூ
மென மும்முறையுச்சரித்து வித்யாகலாயெ அக்னிதத்வாய நம:
எனபூஜித்து(௨௭) தத்வாதிபரைபூஜிக்க ஹிருதயம் முதல் நெற்
றிவரை வாயுதத்வமாகும் ஓம்ஹ்ரெலெம்என இரண்டுதடவை யுச்
சரித்து சாந்திகலயெவாயுதத்வாயநம: எனபூஜித்து(௨௮)தத்வா
திபரையும் பூஜிக்க நெற்றிக்குமேல் ஆகாசஸ்தானம் ஓம்ஹௌ
ம் சாந்தியதீதகலாயைஆகாச (௩௦) தத்வாயநம: என பீஜம் ஒரு
முறையுச்சரித்து பூஜித்து தத்வாதிபரையும் பூஜிக்க நாபிஅக்னி
யில் (௩௧) ஜீவாத்மாவைபொசிக்கி திரும்பஅமிருதத்தால்நனைத்து
உண்டானதாகப்பாவித்து தத்துவாதீதமான (௩௨) ஜீவனைமகேஹ
சரூபமாய் மறைத்தலுக்கும் அனுக்கிரஹத்திற்குங்காரணமான
ஹெடி மூர்த்தியாய் தியானித்து விஷ்ணுபரிபாலிப்பவராய்பாவிக்க
(௩௩) இதுஸ்திதிக்கிரமபூதசுத்தியாகும். இதைவைசியர்கள் அனு
ஷ்டிக்கத்தக்கது. இனி சங்காரபூதசுத்தியைக் கேட்பாயாக (௩௪)

பாதம்முதல் முழந்தாள்வறை பச்சைவர்ணமாயும் சதுரசிராகிருதி யாகவும் எட்டுதிக்கிலும் வஜ்ராயுதஅடையாளமும் ஹ்லாமென்னு பீஜத்தை ஐந்துமுறையுச்சரித்து (௩௫) பாதம்முதல் முழந்தாள் வறை பிரதவிஸ்தானமாகவும கந்தம் ரஸம் ரூபம் ஸ்பர்சம் சப்தம் முதலிய ஐந்துகுணங்களையும் (௩௬) நிவிருத்திகலேயி லிருப்பதாய் தியானித்து இதற்குஅதிபர் பிரும்மாவும் பிரும்மாதிபதிஸத்யோ ஜாதமாகப்பாவிக்க (௩௭) முழந்தாள்முதல் தொப்புள்வறைஜலஸ் தானமும் சந்திரபிரபை அடையாளமும் கோடிவெண்தாமறையி னடையாளமும் ஹ்லீமென்னுபீஜத்தைநான்முறையுச்சரித்து(௩௮) ஜலாதிபதிவிஷ்ணுவும் இவருக்கதிபதிவாமதேவமுமாய்பாவித்து ஜலத்தின்தன்மாத்திரை நான்கான (௩௯) ரஸம், ரூபம், ஸ்பர்சம், சப்தம்முதலிய நான்குகுணங்களையுன்னீக்கிவிஷ்ணுவையும் வாம தேவறையும்பாவிக்க (௪0) தொப்புள்முதல் ஹிருதயம்வறை அக் னிஸ்தானம் திரகோணம் ரக்தவர்ணம். கோணங்களில் ஸ்வஸ்திக அடையாளம் ஹ்லூமென்னும்பீஜத்தை மும்முறைஉச்சரித்து (௪௧) வித்யாகலாயை ருத்ராயநம: எனப்பூஜித்துரூபம் ஸ்பர்சம் சப்தம் முதலியகுணங்களைநீக்கி (௪௨) இதற்குஅதிபர் ருத்திரறையும் மூ ர்த்தீசர் அகோரத்தையும்பாவிக்க (௪௩) ஹிருதயம்முதல் புருவ மய்யம்வறை வாயுதத்வம் அருகோணம் புகைவர்ணம் ஹ்லேமென் னும்பீஜத்தை இரண்டுதடவையுச்சரித்து (௪௪) சாந்திகலாயைநம: எனபூஜிதது இதற்குஅதிபானமஹேசுவரறையும்மூர்த்திபரான தத்புருஷத்தையும் பூஜித்து தியானிக்க (௪௫) புருவமய்யம்முதல் விருத்தாகாரம் ஆகாசமண்டலம் ஸ்படிகஅடையாளம் ஹ்லளமென ஒருமுறையுச்சரித்து (௪௬) சாந்தியதீதகலே ஸதாசிவம் மூர்த்தீசு வரம் ஈசானம் இவர்களை பூஜித்து தியானிக்க (௪௭) பிரதிவிமுத லியஐந்துபூதங்களுள் ஆணவம், மாயை, கர்ம்மம், திரோதி, பைந் தவமென ஐவகைபாசங்களிருக்கின்றது (௪௮) இந்தஐந்துபாசங்க ளால்ஆத்மா பந்தித்துள்ளவன். பதிபாவம்வரும்பொருட்டுஐந்துபா சமுடிச்சையும்அவிழ்த்தல்வேண்டும்(௪௯) இந்தஸம்ஸ்காரஞ்செய் வதால் பதிபாவமான ஸாஜாத்யமுண்டாகும். ஓம் ஸிலீம் பம் சும் ஹூம்பட் பாசுபதாஸ்திராயநம: (௫0) எனவாவது அல்லது ஹூம் ம்பட்டிறுதியாகவாவது மந்திரத்தையுச்சரித்து அங்குசமுத்திரை யால் (௫௧) முழந்தாள்முடிச்சை அறுத்து ஷடிமுத்திரயால் முழ ந்தாளை மூன்றுதடவை சுற்றுக (௫௨) இதுகிரந்திச்சேதனமாகும்

நாபிகிரந்தியை முன்சொன்ன அஸ்திரமந்திரத்தாலும் முத்திரை யாலும்ச்சேதிக்க (௫௩) ஹிருதயகிரந்தியை முன்போல் பாசுபதா ஸ்திரமந்திரத்தால்ச்சேதிக்க கழுத்தின்கிரந்தியையும் முன்போல் ச்சேதிக்க (௫௪) பிரம்மரந்திரத்தின் கிரந்தியையுமிவ்வாருச்சேதி க்க இது ஐவகைகிரந்திச்சேதனமாகும். யமென்னுபீஜத்தை பன் னிரண்டுதடவையுச்சரித்து (௫௫) வாயுவை கும்பகஞ்செய்து உள் ளும் புரம்பும்சரீரத்தைஉலரச்செய்துரம்மென்னும்பீஜத்தைஇரு பத்தோருதடவையுச்சறித்து (௫௬) இது அக்னிபீஜமென்பதாம். இதினால் உள்ளும் புரம்பானசரீரங்களை தகித்து (௫௭) வம்மென் னும் அமிருதபீஜத்தைஅருபத்துமூன்றுதடவையுச்சரித்து முன் பொசுக்கப்பட்டசரீரத்தை அமிருதத்தால் நனைத்து (௫௮) திரு ம்பஉண்டானதாய்பாவித்து லம்என்னும் பீஜத்தை யிருபத்துநா ன்குதடவை உச்சரித்து அபிமந்திரித்தபிண்டமாய்உறட்டி (௫௯) ஹௌம்என்னும் பீஜத்தை முப்பத்துமூன்றுதடவையுச்சரித்து சிரசுமுதல்பாதம்வரையில் உள்ளகரசரணாதி அவயவங்களைபாவிக் க (௬0) இதுதகனுப்லாவன அமிர்தாப்ரலானசம்ஸ்காரம் என்பதா ம். இந்தசம்ஸ்காரத்தை கிரமமாய்விதியோடு செய்தல்வேண்டும் (௬௧) ஜீவபாவநிவர்த்தியின் பொருட்டு அக்கினிபீஜத்தை உச்சி ரித்து மூலாதாரத்திலுள்ள அக்கினியை எழுப்பி ஆத்மாவை (௬௨) பொசுக்கப்பட்ட நூல்போல் தியானித்து பிரம்மரந்திரத்தி னின்றுவரும் வெண்தாமரை வர்ணமுடையதாய் வியாபகமாயும் யோகபீடத்தோடுகூடியதாயுள்ள கமலத்தை (௬௩) ஓம் என்னும் மந்திரத்தால் கீழ்முகமாககற்பித்து வம்என்னும்அமிர்தபீஜத்தால் அமிர்தத்தைபெருக்கி(௬௪) திரும்பஉண்டானதாய்பாவித்துஉற்பவ முத்திரைகொடுக்கஅகோரஹிருதத்தையும்கியானசக்தியையும்பா வித்து(௬௫) திவ்யதேகமானசத்பாவகல்பனம்செய்க. இந்தபிரகாரம் சம்ஹாரகிரமபூதசுத்தியைசொன்னோம். இனிஉரோதானகிரமத்தை கேட்பாயாக(௬௬) காலின்பெருவிரல்தொடங்கி இடுப்புவரையில்இர ண்டுரூபமாகவும்இதற்குமேல் பிரம்மரந்தரம்வரையில் ஒருரூபமாக வும்(௬௭) ஹிருதயம், கண்டம், தாலு, ப்ரூமத்யம், பிரம்மரந்தரம் இந் தஐந்துஸ்தானங்களில்(௬௮) இடைபிங்கலைநாடிகளோடுகூடியதாய் ஹிருதயம் முதலிய ஸ்தானங்களில் அதோமுகமாயிருக்கிற பத்ம ங்களங்களோடு (௬௯) கூடினதாய் உள்ளே துவாரத்தோடுகூடி னதாகவும் உள்ளிலும் வெளியிலும் அமிருததாரையோடு கூடிய

தாய் மேலான ஆகாசரூபமான (௭௦) சக்தியை ஸுஷும்னாநாடி
யாக தியானித்து ஹிருதயகமலத்திற்கு நடுவே ஹூம்காரம் ஜ்வ
லிப்பதாய் (௭௧)பாவித்து வாயுவை பூரகம்செய்து பின்கும்பகம்
செய்துஹூம்காரத்தில்சித்தத்தைவைத்து வாயுவை மேலெழுப்பி
(௭௨) ஹூம் பட் என்னும் மந்திரத்தால் அதோமுகமான பத்ம
முகுலங்களை சோடிகாமுத்திரையால் மேன்முகமாக்கி (௭௩) அ
விழ்க்கப்பட்டமுடுக்குக்களையுடையதாய் விரிந்ததாய்பாவித்து வா
யுவையடக்கி வலதுமூக்கினால் ரேசகஞ்செய்து (௭௪) திரும்பபூற
கவாயுவினாலே ஹிருதயபங்கஜத்தை அடைந்திருப்பவனாய் விள
ங்குகிற நக்ஷத்திராகாரமாய் (௭௫) சாந்தபீஜமயனாய் ஹிருதயஸ
ம்புடிதமான சைதன்யனை ஹூங்காரத்தினுடைய சிகையில்வைத்
து பீஜவிக்ரகனாய் (௭௬) ஹூம் காரசிகையிலிருப்பவனாய் புர்யஷ்
டகஸ்வரூபனாயிருக்கிற புருஷனை சூக்ஷ்மரூபியாகவும் பிந்துபூத
னாகவும் (௭௭) நிராமயனாகவும் பாவித்துதிரும்பகும்பகம்செய்து
வாயுவைமேலே எழுப்பி ஸம்ஹாரமுத்திரையினால் (௭௮) பிரம்
மாதிகாரணதியாகக்கிரமத்தால்ஒருஉத்காதத்தால்(௭௯) ஓம்ஹூம்
ஹாம் (௮௦) ஹம் ஹாம் ஹூம் (௮௧) ஆத்மனேநம: எனதலை
யில்பூஜித்து ஆத்மாவைக்கொண்டு சென்றுபோக்கியகர்மாபோக
த்தின்பொருட்டு துவாதசாந்தத்திலே சிவனிடத்திலே யோசி
த்தல்வேண்டும் (௮௨) இவ்வாறு பீஜத்தைஉச்சரிப்பதால் சிவத்
தில்லயமானவனாய்சூக்ஷ்மதேகசுத்தியின்பொருட்டுவே தவிதமாய்
(௮௩) அதனதன்காரணங்களில் தத்துவங்களை பிந்துபர்யந்தம் ஒ
டுக்குதல்வேண்டும் (௮௪) கந்தத்தில் பிருதிவியையும் ரசத்தில்
அப்புவையும் ரூபத்தில் அக்னியையும் ஸ்பர்சத்தில் வாயுவையும்
சப்தத்தில் ஆகாசத்தையும் (௮௫) இந்த தன்மாத்திறைகளை தா
மச அஹங்காரத்திலும் வாக் பாத பாணி பாயு உபஸ்தம் (௮௬)
இவைகளைராஜஸஅஹங்காரத்திலும்சுரோத்திரம் துவக்சக்ஷூஜிக்
வை கிராணம் மனம் இவைகளை சாத்விக அகங்காரத்திலும் ஒடு
க்கி (௮௭) இந்த மூன்று அகங்காரங்களையும் புத்தியில் ஒடுக்கி
புத்தியை குணத்திலொடுக்கி குணத்தை பிரகிருதியில் ஒடுக்கி
(௮௮) பிரகிருதியை ராகத்திலொடிக்கி ராகத்தை வித்தையிலொ
டுக்கி வித்தையை கலையிலொடுக்கி கலையை மாயையிலொடுக்கி
மாயையை சுத்தவித்தையிலொடுக்கி (௮௯) சுத்தவித்தையை ம
ஹேசரிலொடுக்கி மஹேசரை சதாசிவத்திலொடுக்கி சதாசிவத்தை

சுத்தியிலொடுக்கி சத்தியை சிவத்திலொடுக்குதல் வேண்டும் (௯0)
சிவபெருமானுக்கு மேலாயுள்ளவரும் சமமாயுள்ளவரும் இல்லை
இவர் அப்ரமேயர் அனிர்தேசியர் ஆறுகுணங்களால் நிறையபெற்
றுள்ளவர் (௯௧) இது சைவக்ரமமாகும சாக்தம் குண்டலினிவ
ரை லயஸ்தானமாகும். சைவம் சைவத்தாலும் சாக்தம் சாக்தத்
தாலும் செய்யதகுந்தது. (௯௨) இதற்விரோதமாய்செய்வாராகில்
சர்த்தா கர்மா இவ்விரண்டும்நாசத்தைஅடையும், இதில் கூறியப
படியே சூக்ஷ்மதேகசுத்தியை செய்க (௯௩) காரணத்தினின்று
சூக்ஷ்மமுண்டாயின சூக்ஷ்மத்தினின்று ஸ்தூலமுண்டாயின
இம்மூன்றும் ஒன்றைவிட்டொன்று பிரியாதுடைமையாதல் பற்றி
இம்மூன்றும் ஒன்றேயென்பது திண்ணம் (௯௪)
சூக்குமசுத்திசெய்தால் ஸ்தூலசுத்திவேண்டுவதில்லை மோஹத்
தால்செய்வாராகில் சூக்குமசுத்திபயனற்றதாகும் (௯௫) சூக்கு
மம்தோஷமானல் ஸ்தூலமும் தோஷமாகும். ஸிருஷ்டி ஸ்திதி ஸ
ங்காரம் இவைகளுக்கு ஸ்தூலதேகசுத்தியும் (௯௬) திரோதானத
திற்கு சூக்குமதேகசுத்தியும் அனுக்கிரஹத்திற்குஸ்வரூபஸாக்ஷா
த்காரமும் இவ்வாறுள்ள பேதங்களால் பூதசுத்திசெய்தல்வேண்
டும்(௯௭) இதுவரைதிரோதானக்கிரமபூதசுத்தியைச்சொன்னோம்.
இனிஅனுக்கிரகக்கிரமத்தைக்கேட்பாயாக தனதுதேகம்பிரதிவிமு
தலியபஞ்சபூதங்கள்விரையாகவும் (௯௮) பிரும்மவிஷ்ணுக்களால்
மூளையுண்டானதாகவும் ராகம் த்வேஷம் தர்ம்மம் அதர்ம்மம்மோ
கங்கள்வேறாகவும் (௯௯) வித்தை அவித்தை அதிபதிகளாய்ரக்ஷி
க்கிரதாகவும் கலைமுதலான தத்வங்கள் ஸாரமாகவும் அந்தமாத்தி
ரைகளான இந்திரியங்கள் (௧00) கிளைபக்கக்கிளைகளாகவும் விஷய
ங்களிராகவும்பிரபஞ்சம்புஷ்பமாகவும்புத்திவியவஸாயிகள் (௧0௧)
ஸங்கல்பம் பலமாகவும் அதின்ரஸம்புஜித்தற்குறியதாகவும் புருஷ
ருகிறபக்ஷிபுஜிக்கிரதாகவும மேலுங்கீழுமான ஆலமரமாக தியா
னித்து (௧0௨) பிங்கலையால்முற்பாதி பூரகவர்யுவினல் பூரக(௧0௩)
கும்பகஞ்செய்து மூர்த்தாமுதல் பாதமவரை கட்டைவிரல் அணி
விரலைச்சேர்த்து மற்றவிரல்களைநீட்டி (௧0௪) ஓம்ஹாம் ஆகாசவா
யுஅக்னிஆபபிரதிவ்யாதி (௧0௫) பஞ்சபூதபீஜாப்யாம்நமஃ எனபூ
ஜித்து தலைமுதல் பாதவரையில் துடைத்தல் வேண்டும்(௧0௬) கை
யைஅஞ்சலிசெய்து ஆகாசத்தினின்று வாயுவும், வாயுவினின்று
அக்னியும் (௧0௭) அக்னியினின்றுஜலமும் ஜலத்தினின்று பிருதி

வியும் பிரதிவிமுதல் ஆகாசமிறுதியாக ஒன்றுசேர்ந்து விரையாக வும்பாவித்து (௧௦௮) ஜாதிகுலம்முதலியவற்றிற்குஇடமாயுள்ளது இந்தஸ்தூலதேகமென தியானித்து பிரதிவிஸ்தானத்தில் பீஜமுத்திரை (௧௦௯) காட்டுக திரும்பபூரகமுற்பாதியால் கும்பகஞ்செய்து (௧௧௦) வலதுகைஅணிவிரலால் தொப்புளில் ஓம் ஹாம பிரும்மவிஷ்ணுப்யாம உத்பின்னங்குராய நமஃ (௧௧௧) எனப் பூஜித்து அஞ்சலிசெய்து தியானிக்க (௧௧௨) இந்திரியங்களுக்குமபூதமாகவும் இதை யோனியாகிய க்ஷேத்திரத்தில்வைத்து பிரும்மா ஸிருஷ்டிப்பதாயும் விஷ்ணுபரிபாலிப்பதாகவும் (௧௧௩) பின்னமற்ற மூலையாக பிரும்மவிஷ்ணுக்களை தியானிக்க ரேசகபிற்பாதிகும்பகஞ்செய்து (௧௧௪) இரகைகட்டவிரலை பிரதவிஸ்தானத்தில் வைத்துஓம் ஹாம் ராகத்வேஷதர்ம்ம (௧௧௫) அதர்ம்மமோஹமூலாய நமஃ எனப்பூஜித்து அஞ்சலிசெய்துதியானிக்க (௧௧௬) ஓம் ஹாம் ஹௌம் மாயாஸ்தானபீஜமாகவும் கர்ம்மமூலமாகவும் தர்ம்மாதர்மத்தையும்பாவித்து (௧௧௭) ராகத்வேஷமோஹம் உபமூலமாகவும் இவ்வாறுமூலோபமூலங்களைபாவிக்க (௧௧௮) பூரகத்தின்பாதிகும்பஞ்செய்து ஹிருதயத்தில் ஓம்ஹாம் (௧௧௯) வித்யாவித்யாதிபபரிபாலிதாயநமஃஎன மத்யமவிரலால் நியஸிக்க (௧௨௦) அசுத்தமான அவித்தை மாயாகர்ப்பத்திலிருந்ததாய் வித்தைபரமெனவும் இந்தபறை பறிபாலிப்பதாகவும் (௧௨௧) பாவிக்கதிரும்பமுற்பாதிகும்பகஞ்செய்துஓம்ஹாய் (௧௨௨)கலாதிதத்வஸாரேப்யோநமஃ எனகழுத்தில் தர்ச்சனிவிரலால் நியஸித்துதியானிக்க (௧௨௩) நடக்கிரது நடக்கவேண்டியது நடக்கப்போகிரது இமமூன்றுமுடையகலாதத்வம் விருக்ஷம் அசையாதிருத்தர்போட்டு ஸாரமாகபாவித்தல்வேண்டும் (௧௨௪) கும்பகமுற்பாதிசெய்து ஓம் ஹாம் (௧௨௫) தன்மாத்ரேந்திரியசாகோபசாகாபநமஃ எனபுருவநடுவில் தர்ச்சனிவிரலால்நியஸிக்க (௧௨௬) தன்மாத்ரேந்திரியம் ஞானங் கர்மமென இரண்டுபிரிவாகும். இதை சாகையாகவும் உபசாகையாகவும்தியானிக்க (௧௨௭) கும்பகமுற்பாதிசெய்து ஓம் ஹாம் (௧௨௮) விஷயாலோசனபல்லவாயநமஃ என தர்ச்சனிவிரலால் நெற்றியில் நியஸிக்க (௧௨௯) பல்லவம்பிந்தூரூபம் சப்தமுதலியவற்றிற்கு விஷயமாயுள்ளது ஈந்துதளிரோடுகூடியதாய் தியானிக்க (௧௩௦) திரும்ப கும்பகமுற்பாதிசெய்து ஓம்ஹாம்புத்தயேநமஃ (௧௩௧) கட்டைவிரலால் சிரஸில்நியஸிக்க வியவஸாயத்தில் ஸங்கல்பித்த பல்மானது

புத்தியின் ஸ்வரூபமெனவும் (கங௨) இது ஆத்மாவுக்குதர்ம்மமா
யுள்ளதெனவும் இதை சிரஸில் பாவிக்க திரும்பகும்பக முற்பாதி
செய்து (கஙங) ஓம்ஹாம் புருஷாயநம: எனகட்டைவிரலால்சிரசில்
நியசிக்க (கஙச) ஆத்மாபக்ஷிரூபமாகவும் புசிக்கத்தக்கதை புசித்
தற்குறியது புருஷனென (கஙரு) இவ்வாறு ஆலமரமாக தியானி
க்க பூரகமுற்பாதிசெய்து ஓம் ஹ்லாம் ஹ்லாம் ஹ்லாம் ஹ்லாம்
ஹ்லாமென ஐந்துமுறை மெள்ளவுச்சரித்து நெற்றியிலஞ்சலிசெ
ய்து (கஙசா) பத்திரம்புஷ்பமில்லாததாய் ஆலமறத்தை அசைவற்
றதாய்பாவிக்க பூரகபிற்பாதி கும்பகஞ்செய்து (கஙஎ) ஓம் ஹ்ரீம்
ஹ்ரீம் ஹ்ரீம் ஹ்ரீமென மந்தோச்சாரமாய் நான்குமுறையுச்ச
ரித்து முன்போல் அஞ்சலிசெய்து ஜலத்தால் நனைக்கப்பட்டதாய்
எலை புஷ்பத்தோடு கூடியதாய் (கஙஅ) பாவிக்க கும்பகமுற்பாதி
செய்து வித்யாகலாபீஜம் ஓம் ஹ்லூம் ஹ்லூம் ஹ்லூமென மந்
தோச்சாரணமாய் மும்முறையுச்சரித்து(கஙகூ)வலதுகால் கட்டை
விரலிலிருந்து உண்டாகும் காலாக்னியால் உலர்ந்தபத்திரம்முதலி
யபேதமற்று (கச0) பொசுங்கியதாய் தியானித்து பாதத்தின்பெ
ருவிரல்முதல் சிரசுவரை கையால் துடைத்தல்வேண்டும் (கசக) பி
ன்ரேசகபாரார்த்தஞ்செய்துகும்பகஞ்செய்துசாந்திகலாபீஜமிரண்டு
தரம்(கசஉ)உச்சரித்துமுன்பொசிக்கிய சாம்பலைபத்துத்திக்கிலும்
காற்றினல் சோடிகாமுத்திரையாலும் (கசங) அஞ்சலியாலும்சிர
சைச்சுற்றிலும் பரந்ததாய் தியானித்து ரேசகபிர்பாதிசெய்து கு
ம்பகஞ்செய்து (கசச) ஓம்ஹ்லம்என ஒருமுறையுச்சரித்துசாந்தி
யதீதகலாயைநம:என திக்குக்களில் வியாபித்துள்ளபஸ்மத்தைஆ
காசத்தில்சேர்த்து (கசரு) சுத்தஸ்படிகநிரமாய் நிர்மலமான ஆகா
சம் தலையிலிருப்பதாய்தியானித்து சிரஸுக்குமேலஞ்சலிசெய்து
(கசசா) யாவும் சூன்யமாய் பாவித்து இந்த ஆகாசத்துள்ளடங்கிய
சிவாபின்னமான ஆத்மாவைசிவனிடத்திலர்ப்பித்து (கசஎ) பிந்
துநாதத்தைஅடைந்து எல்லாபாதைகளிலும்நின்றுநீங்கி ஓம் ஹா
ம்சிவாயவௌஷட்என(கசஅ)சிகையினின்று அதோமுகமாயிருக்
கும்பத்மத்தில் அமிருதம்பெருகிவருவதாய்தியானித்து இதினல்
உள்ளும்புறம்பும் (கசகூ) நனைந்ததாய்பாவித்துஹ்ருதயக்கமலத்தில்
அகாரஉகார (கரு0) மகாரம்முதலிய ஓம்அம்உம்என சுத்தவித்யா
த்மகஆஸனம் (கருக) மூர்த்திமூலத்தால் கட்டைவிரலையும் அநாமி
கைவிரலையும் ஒன்றுசேர்த்துநியஸித்து ஆவாஹிக்க (கருஉ) சுத்த

வித்தை அதிகதேஜஸோடுகூடியதாய்சர்வஞாதிஆறுகுணங்களோ டுகூடியதாய்எல்லாவித்தைகளும்அதினிடத்துண்டானதாய்(கருங தியானித்தாவாஹித்து கர்ணிகையின்னடுவில் ஓம் ஹாம் அஷ்ட புர்யாஷ்டகா (கருச) ந்தராத்மனேநம:என நியஸித்து அஞ்சலிசெ ய்து ஆத்மாவைதியானிக்க (கருரு) புர்யஷ்டதேகமுடைய ஆத்மா வுக்கு உள்ளிருக்கும் பரமாத்மஸ்வரூபமானது எல்லா ஐசுவரங்க ளையுங் கொடுப்பதாயும்சாந்தரூபியாகவும்ஆறுகுணங்களால் நிறை ந்துள்ளதாயும் (கருசா) இந்தபிரகாரம் ஆத்மாவை சிவஸ்வரூப பா வஞ்செய்க சாந்தியதீதகலைகளை பிரணவத்தால் தாண்டியதாய்பா விக்க (கருஎ) சிரஸிற்குமேலும் பூர்வத்திலும் தெற்கிலும் வடக்கி லும் மேற்கிலும் இந்ததிக்குக்களில் முகத்தில் கலைகளை கற்பிக்க (கருஅ) கட்டைவிரல்முதல் கடைவிரல்வறை கலைகற்பிதமுத்திரை யாம். சிரசுக்குமேல் அஞ்சலிசெய்து (கருகூ) சாந்தியதீதம் சாந்தி வித்தை பிரதிஷ்டை நிவிருத்தி இந்த கலைகளை (கசா0) தாண்டிய ஞ்ச பிரும்மத்தை யாவாகிக்க கட்டைவிரலையுந் தர்ஜநீ விரலையும் மொன்றுசேர்த்து ஹிருதயத்தில் சிவாசனம் பூஜிக்க (கசாக) ஓம் ஹாம் சிவாஸநாயநம: என பூஜிக்க புருவநடுவில் ஓம் ஹாம் சிவ மூர்த்தியே நமஹா என நியஸித்து சிரசில் ஓம் ஹாம் சிவாயந மஹா என நியஸிக்க (கசாஉ) ஓம் ஹாம் ஈசானமூர்த்தாயநமஹா என கட்டைவிரலால் சிரசில் நியசித்து தத்புருஷத்தை தர்ச்சனி விரலால் முகத்தில் நியஸித்து (கசாங) மத்யமைவிரலால் அகோர த்தை ஹிருதயத்தில் நியஸித்து அநாமிகைவிரலால் தொப்புளில் வாமதேவத்தை நியஸித்து (கசாச) கடைவிரலால் ஸத்யோஜாதத் தை பாதத்தில் நியஸித்து முன்சொன்ன முத்திரையால் வித்யா தேகத்தை ஹிருதயத்தில் நியஸித்து (கசாரு) நேத்திரமந்திரத்தை நேத்திரமுத்திரையால் நேத்திரத்தில் நியஸித்து கடைவிரல் முதல் கட்டைவிரல் வறை (கசாசா) ஹிருதயம்முதல் அஸ்திரம் வறையில் நியஸித்து பிராஸாதமந்திரத்தை தேஹத்திலாவாஹித்து (கசாஎ) அஸ்திராயநம:என திக்பந்தனஞ்செய்க ஆள்காட்டிவிரலை நீட்டி மற்றவிரல்களைமூடி தலையைச்சுற்றி மூன்று கோட்டையுண்டான தாய்பாவித்து (கசாஅ) அவகுண்டனஞ்செய்வது கலாமயத்தை தா ண்டிய பாவமாகும். கலாஸ்வரூபம்தாண்டுதல் சித்வமுண்டாதற் பொருட்டாம் (கசாகூ) இடைகலையால் பூரகஞ்செய்து சுஷும்ந

நாடியால்கும்பகஞ்செய்து ஜீவாத்மாவைகொணர்ந்துஜ்யோதிரூப மாய்பாவித்து (கஎ0) ஓம்ஹூம்சக்தியைவௌஷட்என பீஜமந்திரக்கிரமத்தாலுச்சரித்து (கஎக) புருவமத்யத்தில் சுத்தசக்தியால் பிரவாகித்துவரும் அமிருதத்தால் தனது சரீரதைநனைத்து (கஎஉ) சிவபெருமானோடுஐக்யஞ்செய்க இது அனுக்கிரம பூதசுத்தியென்பதாம் பிராம்மணர்முதல் சச்சூத்திரியிறுதியாக (கஎங) ஸமயதீக்ஷை செய்துகொண்டோற்கு ஸிருஷ்டிக்கிரமத்தையும் விசேஷ தீக்ஷைசெய்துகொண்டோற்கு ஸ்திதிக்கிரமத்தையும் நிர்வாணதீக்ஷை செய்துகொண்டோற்கு சங்காரக்கிரமத்தையும் (கஎச) ஆசசார்யராய் அபிஷேகிக்கப்பெற்றோர் திரோதானக்கிரம பூதசுத்தியும் அனுஷ்டித்தல்வேண்டும் ஆதிசைவ பிராம்மணர் எழுவகை ஸம்ஸ்காரமுடையவராதலின் இவர்களை அதீதரெனவும் சிவாச்சிரமீ எனவுங் கூறப்படும (கஎரு) இவருக்குஞ் சிவபெருமானுக்கும் பேதமில்லை. இவ்வாருள்ள லக்ஷணங்களோடு கூடிய ஆதிசைவர்கள் (கஎசு) அனுக்கிரஹக்கிரம பூதசுத்தியைச் செய்தல் வேண்டும். ஆலயங்களிலும் மற்ற பூஜாதிகளிலும் அனுக்கிரஹக்கிரம பூதசுத்தியே செய்தல்வேண்டும் (கஎஎ) மோஹத்தால் இதற்குவித்யாஸமாய்ச்செய்வாராகில் ராஜ்யத்தில்பஞ்சமுண்டாகும் பூதசுத்தி செய்வதுசிவத்வம் ஆத்மாவுக்கு உண்டாதற்பொருட்டாம் (கஎஅ) இந்தப்பிரகாரம் பூதசுத்தி செய்தல்வேண்டும் இதுவரை பூதசுத்தியின் கிரமத்தைச சொன்னேம். இனி மானஸீக பூஜையைச் சொல்லுவேன் கேட்பாயாக. இந்தப்பிரகாரம் காமிகாம்மம் பிரதிஷ்டாதந்திரம கிரியாபாதம பூதசுத்திஎன்கிர ஒன்பதாவது படலம்முற்றிகைபெற்றது சுலோகம் கஎசு ஆக, கூஅரு0

## அந்தர்யாக ஆரம்பம்.

இதின்பின் அந்தர்யாகத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக ஸம்ஸ்காரஞ்செய்த சிவாங்கம் மூன்று பிரிவினவாகும் (க) இவை சாங்கம், உபாங்கம், பிரத்தியங்கமென மூன்றும் அந்தர்யஜனம் ஸாங்கமும் (உ) தாரகம், தண்டம், முண்டம், கலைவக்தரம, மாதிருகை இவைகள் உபாங்கமும் சிவஹஸ்தம் பிரத்யங்கங்களுமாகும் (ங) அஷ்டதிரும்ஸத்கலா நியாஸம் தாரகாரூபமும் தண்டபங்கிநியாஸம் தண்டரூபமும் (ச) முண்டபங்கிநியாஸம் முண்டரூபமும் கலாபங்கி நியாஸங்கலாரூபமும் வக்தரபங்கிநியாஸம் வக்தரரூபமு

ரண்டுகண்கள் எல்லாலோகங்களிலும் இருப்பவராய் (௧௭௯) இர
ண்டு கையில் (கூதம்) பக்கத்தில் விரைகளை உடையவராய் ஆகாச
த்தில் திவ்யரூபத்தினால் எல்லா லோகங்களையும் பரிபாலிப்பவரா
ய் (௧௮0) எல்லா ஆபரணங்களையும் அணிந்தவராய்த்யானித்து நை
வேத்யதூபதீபார்க்யம் கொடுத்து (௧௮௧) இதற்குமுன் அக்னிகா
ர்யம் செய்க அக்னி கர்யத்திற்கு குண்டம் யோஜ்யாகிருதியாய்
போடுதல்வேண்டும் பாலாக்கினிவரை அக்னியை சமஸ்கார்ம் செ
ய்து பாலாக்னிஹிருதயத்தில் (௧௮௨) பூதேவியை மூலமந்திரத்
தால் ஆவாஹித்து பூதேவி மூர்த்த முகம் ஹிருதயம் குக்யம்பா
தம் (௧௮௩) சடங்கங்களினால்ஆயிரம் இதில் பாதி இதிலும் பாதி
கணக்கினால் ஹோமம் செய்து (௧௮௪) இவ்வாறே எல்லாதிரவிய
ங்களையும் ஹோமம் செய்து பூர்ணாகுதி ஓம் ஹாம் பூதேவி ஹிரு
தயாய (௧௮௫) வௌஷட் என பூர்ணாகுதிசெய்க பாலாக்னிஞான்
யாகத்தில் உன்னால் பரிசுத்தமான (௧௮௬) மண்ணை கிருஹிபபத
ற்கு அநுஞ்ஞை தருதல்வேண்டுமென பிரார்த்தித்து பரிசாரகனை
அழைத்து அவன்கையை சிவகாரமாக்கி (௧௮௭) மண்வெட்டியை
அவன் கையில் கொடுத்து பூதேவியின் வயற்பிரதேசத்தில் மண்
ணை ஐந்து தடவை (௧௮௮) அல்லது மூன்றுதடவை பிராஸாத ம
ந்திரம் உச்சரித்து மண்வெட்டியால் கிரஹித்து தங்கம் முதலிய
தாம்பாளத்தின் நடுவே ஹிருதயமந்திரத்தால் வைத்து (௧௮௯) ப
ட்டினால் மூடி சந்தனாக்ஷதபுஷ்ப கூர்சம் முதலியவற்றால் அலங்க
ரித்து ஆசாரியர் தர்ப்பாக்கிரத்தால் மிருத்திகா பாத்திரத்தை
தொட்டுக்கொண்டு (௧௯0) மூலமந்திரம் ௧0௮ அல்லது யதாசக்தி
ஜபித்து பரிசாரகன் சிரஸில் (௧௯௧) பீதாம்பரம் முதலியவற்றால்
அலங்கரித்து மிருத்திகாபாத்திரத்தைஅசையாமல் வைத்து௧௯௨
மிருத்திகை எடுத்த ஸ்தானத்தை அன்ய மிருத்திகையால் நிறை
த்து முன் பூஜித்த தான்ய கும்பத்தில் உள்ள (௧௯௩) தான்யங்க
ளை பூமியில் புதைத்துஎழுசமுத்ரகும்பங்களை அபிஷேகம்செய்து
சந்தனாக்ஷதபுஷ்பங்களால்(௧௯௪)அலங்கரித்து பூமிதேவியைபிரா
ர்த்திக்கவாராக ரூபம் எடுத்து விஷ்ணுவானவர் நாலுகைகளால்
(௧௯௫) உயரக்கொணர்ந்து பூமியைதரித்து இருக்கிற ஏ லோகரூ
பியே மிருத்திகையை என்னால் எடுத்த தோஷத்தை நீக்கி முன்
போல் நீ செய்துகொள்ள (௧௯௬) வேண்டுமென பிரார்த்தித்து ப

ராங்முக அர்க்யம் கொடுத்து (கசுள) விசர்ஜனம்செய்து யானையி லேலும் பல்லக்கிலேலும் பாத்திரத்தைவைத்து (ககூஅ) இல்லா விட்டால் பரிசாரர்கள் சிரஸில் வைத்து வேதகோஷத்தோடும்மங் களவாத்யங்களோடும் ந்ருத்தனம்கீதம்வாத்யம்(ககூகூ) சந்த்ரப்ரபை சூர்யப்ரபை சாமரம்விசிறி பேரிதக்கயவாத்யங்களோடும் வீதி ஆ லயம்(உ00)இவைகளை ப்ரதக்ஷணம்செய்து யாகசாலையில் சென்று சுத்தமானபூமியில்வைத்துநைய்வேத்யாதிகள்செய்க(உ0க)இந்தப் பிரகாரம் பூஜிப்பது உத்தமம் ஒன்பதுகண்டமாய் பிரித்து பூஜிப் பதைவிட்டு அதிபதியை மாத்திரம் பூஜிப்பதுமத்யமம் (உ0உ) பூ தேவியை மாத்திரம் பூஜிப்பது அதமம் (உ0ந) ஆவர்த்தம் அநா வர்த்தம் புநராவர்த்தம் முதலிய பிருதிஷ்டைகளில் உத்தமமாய் செய்தல் வேண்டும் (உ0ச) உத்சவத்தில் மத்யமமாய் செய்தல்வே ண்டும் தீக்ஷையில் அதமமாய் செய்தாலும்அந்தந்தகாலத்திற்கு த க்கவாறு மிருத்ஸங்காஹணம் செய்க இதற்கு விரோதமாய் செய் வாராகில் ராஜ்யம் நாசத்தையடையும் (உ0௫) இதனால் சொன்ன படிசெய்க இதன்பின் க்ஷெளரகர்மத்தை சொல்லுகிறேன் கேட் பாயாக (உ0சு) இவ்வாறு காமிகாகமம் பிருதிஷ்டாதந்திரம் கிர் யாபாதம் மிருத்ஸங்காஹணவிதியென்கிற உசு-வது படலம் முற் ற்பிறு ஜலோகம் உ0சு. ஆக ச0எசு

## ஆச்சார்யக்ஷெளரகர்மம் கூறப்படுகிறது

ரக்ஷாபந்தனத்திற்கு அங்கமாய் க்ஷெளரம்சொல்லப்பட்டது அங்குரார்ப்பணத்திற்குமுன் அந்ததினத்திலேயே க்ஷெளரம் செய்து கொள்ளல்வேண்டும் (க)இதற்குமுதல் நாளும் மறுநாளிலும் செ ய்துகொண்டு ரக்ஷாபந்தனம் செய்துகொள்ளல் கூடாது மோகத் தால் செய்வாராகில் மழையில்லாது போய்விடும் (உ) தேவகார்ய த்திலும் பிதுருகார்யத்திலும் க்ஷெளரத்திற்கு காலமும், பக்ஷமும் தினம் முதலிய நல்லதைப் பார்க்கவேண்டுவதில்லை மேலே கூறிய மங்களகார்யங்களுக்கு எல்லா காலங்களும் உத்தமமேயாகும் (ந). ராத்தக்காலத்தில் க்ஷெளரமும் இராத்திரியில் அங்குரார்ப்பணமும் செய்தல்வேண்டும் அன்யதினத்தில் க்ஷெளரம் செய்துகொண்டு ரக்ஷாபந்தனம் செய்துகொள்ளல்கூடாது (ச) எந்த இடத்தில் ஆ லயம் இருக்கிறதோ அந்தஸ்தலத்தில் க்ஷெளரம் செய்துகொள்ள

ல்வேண்டும் அன்யக்ராமத்தில் செய்துகொண்டு வருதல் கூடாது (௫) ரக்ஷைக்கு அங்கமான க்ஷௌரம் செய்துகொள்ளாவிட்டால் அந்த கர்மம் பயனற்றதாகும் ஆசார்யன் அர்ச்சகன் ஸ்தானீகன் பாசகன் (௬) பரிசாரகன், சாதகன், ருத்ரக்கள் இவர்கள் யாவரும் க்ஷௌரம் செய்துகொள்ளல்வேண்டும் போதகம் ஸர்வஸாதகம (௭) இவ்விருவரும் க்ஷௌரம் செய்து கொள்ளாவிட்டாலும் தோஷமில்லை நதிகரை, குளத்தக்கரை, சுத்தப்ரதேசம் மநோஜ்ஞ்யமான இடம் (௮) இவைகளில் பிரபைகல்பித்து அலங்கரித்து நெல்லு அரிசிகளைப் பரப்பி மனு சூத்ரக்ரமத்தால் (௯) பதமாக்கி நடுவிலுள்ள ஒன்பது பதங்களை ஒன்றாக்கி அஷ்டதளபத்மம் போட்டு (௧0) வேதகோஷத்துடனும் மங்களவாக்குடனும் நிருத்தம் கீதம் வாத்யம், குடை சாமரம் சூர்யபிரபை சந்திரபிரபை (௧௧) மயில்தோகை விசிறி பனையோலை விசிறி பட்டுகள் முதலிய எல்லா சம்பாரங்களோடும் (௧௨) பூஜாத்ரவ்யங்களோடும் ஆசார்யர்களோடு கிராம பிரதக்ஷிணம் ஆலயபிரதக்ஷிணம் (௧௩) மகாவீதி உபவீதி இவைகளை பிரதக்ஷிணம் செய்து முன் அலங்கரித்துள்ள யாகஸ்தானத்தை யடைதல்வேண்டும் (௧௪) கூர்மாஸனத்திலேனும் சுகாஸனத்திலேனும் வடக்குநோக்கி உட்கார்ந்து சாமான்யார்க்ய ஜலத்தால் ப்ரோக்ஷித்து நிரீக்ஷணாதி (௧௫) ஐந்து சுத்திகள் செய்து சங்கல்பித்து விக்நேஸ்வரபூஜை செய்து புண்யாகவாசனம் செய்து (௧௬) அந்த ஜலத்தால் ப்ரோக்ஷித்து அங்கே போட்டுள்ள பத்மமண்டலத்தில் சலாஸனம் பூஜித்து (௧௭) அதன்மேல் ஓம் ஹாம் வ்ருஷபாஸனாய நம: ஓம் ஹாம் வ்ருஷபமூர்த்தயே நம: ஓம் ஹாம் வ்ருஷபாய நம: எனப் பூஜித்து ஒரு முகம் இரண்டுகண்கள் நான்குபாதங்கள் (௧௮) வெண்மைநிறம் வாலுடன்கூடியதாய் எல்லா ஆபரணங்களும் அணிந்ததாய் தியானித்து நைவேத்யதூபதீபார்க்யம் கொடுத்து (௧௯) மண்டலத்திற்கு மேல் கூர்மாஸனம் அல்லது சுகாஸனத்திலேனும் வடக்குநோக்கி ஆசார்யர் உட்கார்ந்து (௨0) இதைச்சுற்றிலும் எல்லா ரித்விஜர்களும் உட்கார்ந்து ஆசாரியனுக்கு இடப்புறத்தில் ஏழு தர்ப்பைகள் பரத்தி (௨௧) தங்கம் முதலியதால் செய்துள்ள கத்தியை அதன்மேல்வைத்து சாமான்யார்க்யஜலத்தால் ப்ரோக்ஷித்து (௨௨) நிரீக்ஷணாதிசுத்தி செய்து அஸ்த்ரமந்திரத்தால் பூஜித்து நைவேத்யதூபதீபம கொடுத்து (௨௩) எண்ணெய் தேய்த்துக்கொண்டு ஸ்

நாநம் செய்து சுத்தமாயுள்ள அப்பட்டனை அழைத்து சந்தன புஷ்ப வஸ்திர பட்டுக்களால் (உச) அலங்கரிக்கப்பட்ட அப்ப ட்டனை நிரீக்ஷணாதி சுத்திசெய்து வாய்பேசாதிருக்கும்படி(உரு) சொல்லி விபூதிகொடுத்து உத்தோளனம் செய்து கொள்ள சொ ல்லி அவன்கையில் கத்தியைகொடுத்து க்ஷௌரம் செய்ய அனும தி கொடுத்தல் வேண்டும் (உசா) குடுமியை க்ஷௌரம் செய்யாது விட்டுவிட்டு மற்றுள்ள சிரஸ், கன்னம் மீசை, தாடி, கழுத்து(உஎ கைமூல முதல் முழங்கைவரையிலும் மணிக்கட்டுக்குகீழ் அஸ்தம் முழுதும் (உஅ) காது மார்பு பாதம்வரைக்ஷௌரம்செய்துகொள் ளல் வேண்டும் இதற்கு விரோதமாய் செய்துகொண்டால் ராஜா, ராஜ்யம் நசித்துவிடும் (உகூ) தசவிதஸ்நாநம் அல்லது ஷட்விதஸ் நாநம் விதிபத்தாய் செய்து சுத்தவஸ்திரத்தால்தலைதுவட்டி (ந0) பட்டு முதலியவை இடையிற் கட்டி ரத்னாதிகள் இழைத்த குண் டலம் தங்கப்பூணல் ருத்ராக்ஷம் விபூதி தாரணம் (நக) இவை மு தலியவற்றால் அலங்கரித்துக்கொண்டு பரமபரமென்னும் பேதமா யுள்ள சாமான்ய விசேஷசந்திகள் இரண்டையும் செய்து (நஉ) சந்தினக்ஷதபுஷ்பமாலைகளால் அலங்கரித்து முன்சொன்ன வாத் யகோஷம் எடுபிடிகளோடு சர்வசாதகம் (நந) போதகமூர்த்தி யால் இவர்களை பல்லக்கிலேத்தி கிராம ப்ரதக்ஷண ஆலய பிரதக்ஷ ணங்களோடே ஆலயத்துள் பிரவேசித்தல் வேண்டும் இந்தபிரகா ரம் க்ஷௌரகர்மம் செய்து கொள்க இதன்பின் அங்குர விதியைக் கேட்பாயாக (நரு) இவ்வாறு காமிகாகமம் பிருதிஷ்டா தந்திரம் கிரியாபாதம் க்ஷௌரகர்மவிதியென்கிற உஎ-வது படலம் முற்று கை பெற்றது சுலோகம் நரு. ஆக. சகசச

## அங்குரார்பணவிதிபடலம்.

இதன்பின் அங்குரார்பணவிதியைச் சொல்லுகிறேன் கேட் பாயாக. எல்லா காரியங்களிலும் மூலாகமமே பிரமாணமாகும் (க) மூலாகமத்திற்கு விரோதமல்லாத உபாகமங்களை கிரஹித்தல்வே ண்டும் மூலாகமத்திற்கு உபாகமம் விரோதமாயிருந்தால் உபாகம த்தை தள்ளும்படி செய்தல் வேண்டும் மூலாகமத்தை தள்ளும்ப டிசெய்தல் கூடாது (உ) மூலாகமம் பூர்வமென்பதும் இதற்கு உத்தரமாயுள்ளது உபாகமம் என்பதாம் அங்குரம் முதலிய எல்லா காரியங்களையும் மூலாகமத்தினாலேயே செய்தல்வேண் டும் (ந) இந்த அங்குரத்தை ஆதிசைவர்களினாலேயே செய்தல்

வேண்டும். மஹாகும்பாபிஷேகத்திலும் சம்ப்ரோக்ஷணைகளிலும் தேவதாஸ்தாபனங்களிலும் (௪) தீர்த்தத்திலும் உத்ஸவத்திலும் தீக்ஷையிலும் கல்யாணத்திலும் முதலில் அங்குரார்ப்பணம்செய்தல் வேண்டும் (௫) ஒருஅங்குரம் செய்திருக்கும்போது இனி ஒருஅங்குரம் செய்தால் கர்மநாசம் உண்டாகும் ஒரு ஆலயத்தில் இரண்டியாகசாலை வருமாயின் அங்குரம் ஒன்றேசெய்தல்வேண்டும் (௬) ஸ்வதந்திரசக்தியாயுள்ள ஆலயத்தில் தனியாய் வேறொரு அங்குரம் செய்தல் வேண்டும் கேவலம் சஹஜம் முதலிய சக்திகளுக்கு ஒரே அங்குரம் செய்தல் போதுமானது (௭) கிராமத்திலுள்ளசிவக்ஷேத்திரத்தில் பிரதிஷ்டையின் பொருட்டும் உத்ஸவத்தின்பொருட்டும் செய்துள்ள அங்குரத்தினுடைய நடுவில் இதற்கன்யமான தேவாலயங்களில் (௮) பிரதிஷ்டோத்ஸவகர்மங்களை ஒருக்காலும் செய்யக்கூடாது மோஹத்தால் செய்வாராகில்ராஜராஷ்டிரம் நாசத்தையடையும் (௯) அங்குரமத்தியில் பரிவாரங்களை பிரதிஷ்டிக்கவேண்டுமாயின் மிருத்ஸங்க்ரஹணம் வாஸ்துசாந்தி அங்குரார்ப்பணம்(௧௦) இந்த மூன்றுகர்மங்களை விட்டுவிட்டு இதற்கன்யமான எல்லாகர்மங்களையும் செய்தல்வேண்டும் அங்குரமல்லாது செய்யும் கர்மம் பயனற்றதாகும் (௧௧) முன்னால் வாஸ்துசாந்தியால் பொசுக்கப்பட்ட பூர்வதேசமானது அமிர்தத்தால் திருப்தியுண்டானதாக பாவிக்கப்படுவது அங்குரார்ப்பணமென்பதாம் (௧௨)ஒன்பதுநாள் ஏழுநாள் ஐந்துநாள் மூன்றுநாள் இப்படிக்கில்லாவிடில் அன்றுபதினமே செய்தாலும் கிரியைக்குமுன் அங்குரார்ப்பணம் செய்தல் வேண்டும்(௧௩) ஒன்பதுநாள் முதல் மூன்றுநாள் வரைசெய்யப்படும் அங்குரார்ப்பணத்தில் ஆசார்யவபனம்செய்து கொள்ளுதல் கூடாது ரக்ஷாபந்தனத்திற்குமுன்தினமே அங்குரம்() செய்து அங்குரம் ரக்ஷை இவ்விரண்டும் ஒரேதினத்திலிருக்குமாயின் அங்குரார்ப்பணத்திற்குமுன், ஆசார்யர் க்ஷௌரஞ்செய்துகொள்ளுதலும்கூடும்(௧௪) க்ஷௌரம் முதல் நாளில் செய்துகொண்டு ரக்ஷைமறுநாள்செய்துகொள்வாராயின்செய்யப்படும் சத்கார்யம் நிஷ்பலமாய் முடிந்துவிடும் ராஜ்யம் பஞ்சத்தால் பீடிக்கப்படும் (௧௫) எல்லாமங்களகாரியங்களிலும் இந்த மங்களாங்குரத்தைசெய்தல்வேண்டும் சூர்யாஸ்தமனத்திற்குப்பின் மூன்றேமுக்கால் நாழிகையளவில் (௧௬) அங்குரார்ப்பணம் செய்தல் வேண்டும் அன்யகாலங்களில் செய்யக்கூடாது மோஹத்தால் செய்வாராயின் செய்யப்படும் கர்த்தாவும் கர்ம

மும் நாசத்தையடையும் (கஅ) இதனால் மத்யான்த்தில் அங்குரம் செய்தல்கூடாது. செய்வாராயின் அசுபத்தையுண்டாக்கும், ஆலயத்தில் முதல்பிராகாரத்திற்கு கர்ப்பாவரணமெனவும் இரண்டாவது பிராகாரத்திற்கு அந்தர்மண்டலமெனவும் (ககூ) மூன்றாவது பிராகாரத்திற்கு மத்தியாஹாரமெனவும் நான்காவது பிராகாரத்திற்கு மர்யாதியெனவும் ஐந்தாம் பிராகாரத்திற்கு மகாமர்யாதையெனவும் பெயராம் இவ்வாருள்ள (உ0) ஐந்து பிராகாரங்களோடு கூடிய ஆலயத்தில் இரண்டாவது பிராகாரத்திலாவது அல்லது மூன்றாவது பிராகாரத்திலாவது யாகசாலை போடுவது உத்தமம் (உக) நான்காவது பிராகாரத்தில் யாகசாலை போடுவது மத்யமம், ஐந்தாவது பிராகாரத்தில் யாகசாலைபோடுவது அதமம் இவ்வாறு சிவபெருமான் யாகத்தின்பொருட்டு யாகசாலை போடுதல்வேண்டும் (உஉ) யாகசாலைக்கு வெளியே யாகசாலையில் பாதி நான்குபுரங்களிலும் சுற்றிலும் ஒருசாலைபோட்டு இதற்கு வாயுதிக்கில் (உங) மூன்றுமுழம்விஸ்தாரம் இதற்குபாதிஉயரம் வர்தவபட்டி, அதோபட்டிகையோடுகூடிய ஒருவேதிபோட்டு (உச) எண்பத்தெட்டுபடிநெல் உத்தமமும் இதிற்பாதி மத்யமும் இதிற்பாதி அதமமும் (உரு) நெல்லைப்பரத்தி இந்த நெல்லிற்பாதி அரிசியும், அரிசியிற்பாதி எள்ளும், எள்ளிற்பாதி பொறியும், இவைகளோடு தர்ப்பை, புஷ்பங்களை பரத்தி (உசா) கிழமேல் தென் வடலாக பன்னிரண்டு சூத்திரங்களைப்போட்டு நடுவிலுள்ள ஒன்பது பதங்களை ஒன்றாகச்செய்து இதற்குநடுவில் (உஎ) எட்டு தலங்களோடு கூடிய பத்மமண்டலம் போட்டு தங்கநூலினால் சுற்றப்பட்டதாயும் தங்கத்தாற்செய்த நீலோத்பதம் (உஅ) தங்கத்தால் அர்த்த சந்திராகிருதியான பிரதிமைகள் நவரத்னம் மாவிலை (உகூ) சந்தனம் புஷ்பம் வஸ்திரம் கூர்சாதிகளால் அலங்கரிக்கப்பட்ட சோமகும்பத்தை கர்ணிக்கு நடுவேவைத்து இந்த சோமகும்பத்திற்கு வலமிடப்புறங்களில் கிருத்திகை ரோகினி கும்பங்களை வைத்து நாற்பத்தொன்கு பதங்களோடு கூடிய ஸ்தானத்தில் நான்கு மூலைபதங்களில் நான்கு கடிகைகளை வைத்து (ஙO) ஈசானகோண பதமுதல் ஏழாவது பதம்வரை எண்ணி இந்த ஏழாவதுபதத்தில் ஒருகடிகையும் ஆக்னேயமுதல் ஏழாவது பதத்தை எண்ணி, இதில் ஒரு கடிகையும் (ஙக) நைருதிமுதல்

ஏழாவதுபதத்தில் ஒருகடிகையும் வாயுதிக்குமுதல் ஏழாவது
பதத்தில் ஒருகடிகையும் இந்தப்பிரகாரம் எட்டு கடிகையைவைத்
து இதற்குள் முப்பத்திரண்டு பதங்களோடு கூடிய ஸ்தானத்தில்
கோணங்களில் நான்குபாலிகைகளைவைத்து, ஈசானகோணமுதல்
இதற்கு ஆறுவது கோணத்தில் ஒரு பாலிகையை வைத்து ஆக்
னேயனேயகோணமுதல் இதற்கு ஆறுவது பதத்தில் (௩௫) ஒரு
பாலிகைவைத்து நைருதிமுதல் எண்ணி ஆறுவது பதத்தில் ஒரு
பாலிகையைவைத்து(௩௬)வாயுமுதல் ஆறுவதுபதத்தில் ஒருபா
லிகையைவைத்து (௩௭) இவ்வாறு எட்டு பாலிகைகளைவைத்து
இருபத்திநாலு பதங்களோடு கூடிய ஸ்தானத்தில் நான்கு மூலே
களிலும் நான்கு சராவங்களை வைத்து இதற்கு (௩௮) ஐந்தாவது
பதத்தில் ஒரு சராவம் வைத்து (௩௯) ஈசானமுதல் வாயுவரை
ஐந்தாவது பதங்களில் ஒவ்வொரு சராவங்களைவைத்து கெடிகை
க்கு வெளியே (௪0) சுற்றிலும் பரிஸ்தரணங்களை போடுதல்வே
ண்டும் இனி பாலிகாலக்ஷணத்தை கேட்பாயாக (௪௧) தங்கம் அ
ல்லது வெள்ளி அல்லது தாம்பரம் அல்லதுமண்ணிலேயாவது
பாலிகை கடிகை சராவங்களை செய்தல்வேண்டும் (௪௨) பாலிகை
யின் முகத்தின் விஸ்தாரம் எட்டு அங்குலமாயிருப்பது உத்தமம்
ஆறு அங்குலம் மத்யமம் (௪௩) நாலு அங்குலம் அதமம் முகத்தி
ன் அளவிற்கு பாதிபாதமிருத்தல்வேண்டும் (௪௪) முகத்தின் அள
வை ஆறாக பங்கிட்டு ஆறில் ஒன்று உதட்டின் அளவு ஆகும் இ
தை மூன்றாக பங்கிட்டு மூன்றில் ஒன்று முகமுதல் பாதம்வரை
த்வாரம் இருத்தல்வேண்டும் (௪௫) தண்டத்தின் உயரம் பதினாறு
உத்தமம் பன்னிரண்டு மத்யமம் எட்டு அங்குலம் அதமம் ஆகும்
(௪௬)ஐந்து அங்குலம் அல்லது மூன்றுஅங்குலம் தண்டத்தின்சுற்
றளவாகும்ஊமத்தம் பூப்போல்பாலிகையின்முகம்இருத்தல்வேண்
டும் விஸ்தாரத்தில்மூன்றிலொன்று நுணியும்நான்கு முகங்களிலும்
இரண்டு உளுந்து அகலம்(௪௮) துவாரமும் வைத்தகடிகை கலசா
கிருதியாய் செய்தல்வேண்டும் மற்றவை பாலிகையைப்போல் செ
ய்தல் கலசம் பாலிகைக்குமேல் நாலு அங்குலம் (௪௯) உயரமாய்
செய்தல் வேண்டும் சராவத்தின் விஸ்தாரம் பத்துஅங்குலமாகும்
(௫0) இதன் அடி இதில் பாதியாகும் இதில் பாதி உயரம் மற்ற
வை பாலிகைபோல் செய்தல் வேண்டும் (௫௧) பாலிகை மண்விரா

ட்டி முட்டைத்தோல் இவைகள் நிறைத்துஇருத்தல் வேண்டும் கெடிகையில் நான்னியக்கதிர்களை நிறைத்து (௫௨) ஜலத்தையும் பூரித்திருத்தல்வேண்டும் சராவத்தில் ஜலத்தை பூரித்து சந்தன அக்ஷத (௫௩) வஸ்தர கூர்சாதிகளால் அலங்கரித்து நான்கு வாசற்படி, தோரணங்களோடும் அலங்கரித்து (௫௪) தற்பமாலைகள் விதானங்களாலும் அலங்கரித்து, ஆசார்யன் கூர்மாஸனம் அல்லது சுகாஸனத்தில் வடக்குநோக்கி உட்கார்ந்து சங்கல்பம் விக்னேஸ்வரபூஜை (௫௫) புண்யாஹவாசனம் செய்து இந்த ஜலத்தால் ப்ரோக்ஷித்தல்வேண்டும் (௫௬) கிரியை ஆரம்பிக்கும்பொழுது கையில் பவித்திரம் தரித்தே செய்தல்வேண்டும் மூன்று தர்ப்பைகளினால் பவித்ரம் செய்தல்வேண்டும் (௫௭) பவித்ரமில்லாமல் செய்யும் கர்மாக்கள் பலனற்றதாகும். எல்லா காரியங்களிலும் பவித்ரம் தரித்து செய்வது சுபத்தைத்தரும் (௫௮) தங்கத்தால் செய்த பவித்ரம் விசேஷமாகும் இது இருந்தால் தர்பையினால் செய்த பவித்ரமும் வேண்டுவதல்ல (௫௯) சாமான்யார்க்யம் கல்பித்து கும்பம் பாலிகை சராவம் கெடிகை இவைகளை இந்த அர்கியஜலத்தால் ப்ரோக்ஷித்து நிரீக்ஷணம் ப்ரோக்ஷணம், தாடனம் அப்யுக்ஷணம், அவகுண்டனம் முதலியவற்றை செய்து தேனுமுத்திரை காட்டி (௬0) நிராதார ஆசனமின்றியில் ஆதாரசக்திமுதல் பத்மாஸனம்வரை மத்யகும்பத்தில் பூஜித்து (௬௧) சோமாஸனம் மூர்த்திமூலம் பூஜித்து ஸோமம் ஸிம்மாஸனத்திலிருப்பவராய் வெண்மைநிறம் சௌம்யமானமுகம் (௬௨) இரண்டு கைகளிலும் நீலோத்பலம் தரித்தவராய் கிருத்திகை, ரோகிணிகளோடு சேர்ந்திருப்பவராய் நக்ஷத்திராதிகளால் விளங்கப்பெற்றவராய் (௬௩) எல்லா ஓஷதிகளையும் தரித்திருப்பவராய் பிரஸன்னமுகமுடையவராய் த்யானித்து ஆவாஹித்து ஸ்தாபனாதி முத்திரைகாட்டி (௬௪) மூர்த்தாமுதல் பாதபர்யந்தமும் ஹ்ரதயாதி ஆறு அங்கங்களை த்யானத்தோடு பூஜித்தல்வேண்டும் (௬௫) ஓம்ஹாம் ஸோமமூர்த்தாய நம: எனப் பூஜித்து ஸோமமூர்த்தா தங்கநிறம் இரண்டுகை அஞ்சலி (௬௬) சுகாஸனத்திலிருப்பவராய் எல்லா ஆபரணங்களுமணிந்துள்ளவராய் த்யானித்து ஓம்ஹாம் ஸோமவக்த்ராய நம: எனப் பூஜித்து (௬௭) ஸோமவக்த்ரம் பால்நிறம் ஒருமுகம் இரண்டுகண்கள் வலக்கை இடக்கைகளில் நீலோத்பலம் விபூதி ருத்ராக்ஷம்

அணிந்ததாய்(௬அ) த்யானித்து ஓம்ஹாம்ஸோமஹிருதயாய நம: எனப் பூஜித்து ஸோமஹிருதயம் ரக்தநிறம் ஒருமுகம் இரண்டு கண்கள் (௬௯) சிரசுக்குமேல் அஞ்சலி எல்லா ஆபரணங்களு மணிந்ததாய் த்யானித்து ஓம் ஹாம் ஸோமகுஹ்யாய நம: எனப் பூஜித்து (எ0) ஸோமகுஹ்யம் வண்டின்னிறம் இரண்டுகை அஞ்சலி ஒருதலை இரண்டுகண்கள் விபூதி ருத்ராக்ஷம் அணிந்ததாய் (எக) த்யானித்து ஓம்ஹாம் ஸோமபாதாப்யாம் நம: எனப் பூஜித்து ஸோமபாதம் சங்கின்னிறம் இரண்டுகைகள் ஒருதலை (எஉ) அஞ்சலி விபூதி ருத்ராக்ஷம் அணிந்ததாய் த்யானித்து ஓம்ஹாம் ஸோமவித்யாதேஹாய நம: எனப் பூஜித்து(எ௩)வித்யாதேஹம் சந்திரவர்ணம் ஒருமுகம் மூன்றுகண்கள் வராபயம் விபூதி ருத்ராக்ஷம் அணிந்ததாய் தியானித்து (எச) ஓம்ஹாம் ஸோமநேத்ரேப்யோ நம: எனப் பூஜித்து ஸோமநேத்திரங்கள் தங்கம் வெண்மை ஜ்யோதி இந்த ரூபங்களுடையதாய் (எரு) இரண்டுகைகள் ஒருமுகம் சக்தி சூலம் தரித்துள்ளதாய் த்யானித்து ஓம்ஹாம் ஸோமஹிருதயாய நம: எனப்பூஜித்து(எ௬) சோமஹிருதயம் ரக்தவர்ணம் இரண்டுகண்கள் ஒருமுகம் பாசம் அங்குசம் எல்லாஆபரணங்களும் அணிந்ததாய்(எஎ) த்யானித்து ஓம் ஹாம் ஸோமசிரஸே நம: எனபூஜித்து ஸோமசிரஸ் ஸ்படிகநிறம்இரண்டுகண்கள்(எஅ) டங்கம் கட்வாங்கம் பிரஸன்னமுகமுடையதாய் த்யானித்து ஓம் ஹாம் ஸோமசிகாயை நம: எனப்பூஜித்து (எ௯) ஸோமசிகை குங்குமநிறம் இரண்டுகண்கள் அஞ்சலிஹஸ்தம் விபூதிருத்ராக்ஷ அலங்கிருதமாய் த்யானித்து(அ0) ஓம்ஹாம் ஸோமகவசாயை நம: எனப்பூஜித்து கவசம் வெண்மைநிறம் ஒருமுகம் இரண்டு கண்கள் (அக) இரண்டுகைகளிலும் நீலோத்பலம் எல்லா ஆபரணங்களும் அணிந்ததாய் த்யானித்து ஓம் ஹாம் ஸோமாஸ்தராய நம: எனப்பூஜித்து (அஉ) ஸோமாஸ்தரம் வண்டின்னிறம் இரண்டுகைகள் ஒருமுகம் ஞானமுத்ரை வரம் இரண்டுகண்கள் ரக்தவஸ்திரம்தரித்துள்ளதாய்(அ௩) த்யானித்து ஆவாஹித்துஸ்தாபநாதி முத்ரைகாட்டிநைவேத்யதூபதீபார்க்யம்கொடுத்தல்வேண்டும்(அச கும்பத்திற்குமேல்ஓம்ஹாம்அமுருத்ரேஸ்வராஸனாயநம:(அரு)இவ்வாறுமூர்த்திமூலத்தையும்பூஜித்து அமிருதேஸ்வரம் வெண்மை நிறம் ஒருதலை இரண்டுகைகள் இரண்டுகைகளிலும் தாமரைப்பூ

கரண்டமகுடம் உடையவராய்த்யானித்து (அகூ) ஏ அமிர்தேஸ்வரா, முன் வாஸ்துசாந்தியின் பர்யக்னிகரணத்தால் பொசுக்கப்பட்ட பூமியை திரும்ப உன் அமிர்தகிரணத்தால் உற்பத்தியைசெய்ய வேண்டுமென (அஎ) த்யானித்து நைவேத்ய தூபதீபார்க்யம் கொடுத்து சந்திரகும்பத்திற்கு வலப்பக்கத்திலுள்ள கும்பத்தில் ஓம் ஹாம் கிருத்திகாயை நம: (அஅ) கிருத்திகை தங்கநிறம் ஒருமுகம் இரண்டுகண்கள் வலக்கையில் நீலோத்பலம் இடக்கை தொங்கவிட்டதாய் த்யானித்து (அகூ) பிரதானகும்பத்திற்கு வடக்கேயுள்ள கும்பத்தில் ஓம் ஹாம் ரோகிண்யைநம: எனப்பூஜித்துரோகிணிபச்சைநிறம் இரண்டுகண்கள் ஒருமுகம் (கூ௦) வலக்கையில் தாமரைபூ இடதுகை துடைமேல் வைத்திருப்பதாய த்யானித்து இவர்கள் யாவருக்கும் நைவேத்திய தூபதீபார்க்யம் கொடுத்தல் வேண்டும் (கூக) இதுவரை முதலாவரணபூஜையைக் கூறினோம் இனி இரண்டாம் ஆவரணபூஜையைக் கேட்பாயாக கிழக்குமுதல் ஈசான மிருதியாக உள்ள பாலிகைகளில் (கூஉ) கிழக்கில் ஓம் ஹாம் சூர்யாய நம: எனப் பூஜித்து தாமரைப்பூவில் இருப்பவராய் ரத்னகாந்தி (கூரு) ரக்தநிறமான மிகுந்த தேஜஸோடும் கூடியவிர்த்தமண்டலநடுவில் வெண்மைநிறமாய் இரண்டுகைகளிலும் தாமரைப்பூ உடையவராய் (கூச) ஒருமுகம் இரண்டுகண்கள் ரக்தவஸ்திரம் தரித்தவராய் த்யானித்து இந்தப் பாலிகையில் வஜ்ரம் மூலமந்திரத்தால் போட்டு நைவேத்ய தூபதீபம் கொடுத்தல்வேண்டும் (கூரு) ஆக்னேயகோணத்திலுள்ள பாலிகையில் ஓம் ஹாம் பௌமாய நம: எனப்பூஜித்து பௌமன் ஒருமுகம் இரண்டுகண்கள் அஞ்சலிஹஸ்தம் (கூசா) ரக்தநிறம் ரக்தவஸ்திரம் ரக்தமாலை அணிந்தவராய் த்யானித்து இதில் வைடூர்யம் மூலமந்திரம் உச்சரித்து போட்டு நைவேத்ய தூபதீபம் கொடுத்தல்வேண்டும் (கூஎ தெற்கேயுள்ள பாலிகையில் ஓம் ஹாம் புதாய நம: எனப் பூஜித்து புதன் ஒருமுகம் அபயவரதன் (கூஅ) கோமேதக நிறம் ஜடாசூடம் யஞ்யசூத்ரமுடையவராய் த்யானித்து மூலமந்திரம் உச்சரித்து கோமேதகத்தை இதில் வைத்து நைவேத்யாதிகள் செய்தல் வேண்டும் (கூகூ) நிருதிதிக்கில் உள்ளபாலிகையில் ஓம் ஹாம் சனீசுவராயநம: எனப்பூஜித்து சனீசுவரன் இந்திர நீலநிறம் தண்டம் பாசம், (க௦௦) காக்கைவாகனத்தி லேறியிருப்பவராய்த்யானித்து மூலமந்திரம்உச்சரித்து இந்திரநீலத்தை இதில்வைத்து (க௦க)

நைவேத்யதூபதீபம்கொடுத்தல் வேண்டும். மேற்கேயுள்ளபாலி கையில் ஓம்ஹாம்பிருஹஸ்பதயேநமஃ எனப்பூஜித்து (௧௦௨) பிருஹஸ்பதிபுஷ்பராகநிறமபுஸ்தகம்அக்ஷமாலைஎல்லாஆபரணங்களும் அணிந்துள்ளதாய்த்யானித்து(௧௦௩)புஷ்பராகத்தைஇதில்வைத்து நைவேத்யாதிகள்செய்தல்வேண்டும். வாயுதிக்கிலுள்ளபாலிகை யில் ஓம் ஹாம்ராஹவேநமஃஎனப்பூஜித்து (௧௦௪) ராகுமரகதநிறம் அஞ்சலிஹஸ்தம்ஒருமுகம் இரண்டுகண்கள் எல்லாஆபரணங் களுமணிந்தவராய்தியானித்து (௧௦௫) மூலமந்திரம்உச்சரித்துமரகதத்தை இதில்வைத்து நைவேத்யதூபதீபங்கொடுக்க. வடக்கிலுள்ளபாலிகையில் ஓம்ஹாம்பார்கவாயநமஃஎனப்பூஜித்து (௧௦௬)பார்கவர்மாணிக்கநிறம், ஒருதலைஅஞ்சலிஹஸ்தம் இரண்டுகண்கள் வெள்ளவஸ்திரம்தரித்தவராய் விபூதிருத்ராக்ஷமணிந்தவராய் த்யானித்து (௧௦௭) மூலமந்திரம்உச்சரித்து மாணிக்கத்தை இதில் வைத்து நைவேத்யதூபதீபங்கொடுத்தல்வேண்டும் ஈசானதிக்கிலுள்ளபாலிகையில் ஓம்ஹாம்கேதவேநமஃஎனப்பூஜித்து (௧௦௮) கேதுபத்மராகவர்ணம் அஞ்சலிஹஸ்தம் ஒருமுகம் இரண்டுகண்கள் விபூதிருத்ராக்ஷஅலங்கிருதராய் த்யானித்து (௧௦௯) மூலமந்திரம் உச்சரித்து இதில்பத்மராகத்தைவைத்து நைவேத்யதூபதீபம்செய்தல்வேண்டும் (௧௧௦)இதுவரைத்விதீயாவரணத்தைச்சொன்னோம் இனித்ரிதீயாவரணத்தைக்கேட்பாயாக கிழக்குமுதல் ஈசானம் வரையிலுள்ள கெடிகைகளில் (௧௧௧) கிழக்கில்ஓம்ஹாம் சௌம்யசந்திராய நமஃஎனப்பூஜித்து சௌம்யசந்திரன்ஸ்படிகநிறம்ஒருதலை (௧௧௨) பாசம்சூலம்எல்லாஆபரணங்களுமணிந்தவராய் த்யானித்து ஆக்னேயகோணகெடிகையில்ஓம் ஹாம்பிரபவசந்திராயநமஃ எனப்பூஜித்து (௧௧௩) பிரபவசந்திரன்வெண்மைநிறம் அஞ்சலிஹஸ்தம ஒருமுகம்இரண்டுகண்கள் வெள்ளவஸ்திரம்தரித்தவராய் (௧௧௪) த்யானித்து தெற்கேயுள்ளகெடிகையில் ஓம் ஹாம்தர்மசந்திராயநமஃ எனப்பூஜித்து தர்மசந்திரன்வண்டின்நிறம் இரண்டு கண்கள் ஒருமுகம் (௧௧௫) இரண்டுகால்கள் அஞ்சலிஹஸ்தம்எல்லா ஆபரணங்களும்அணிந்தவராய் த்யானித்து நிருதியிலுள்ளகெடிகையில்ஓம்ஹாம் ஜ்யோதிசந்திராயநமஃஎனபூஜித்து (௧௧௬) ஜோதிசந்திரன் தங்கநிறம் அஞ்சலிஹஸ்தம் ஒருமுகம்இரண்டுகண்கள் இரண்டுகால்விபூதிருத்ராக்ஷமணிந்தவராய்தியானித்து (௧௧௭) மேற்கேயுள்ள கெடிகையில் ஓம்ஹாம் விபவசந்திராயநமஃஎனப்பூஜி

த்து விபவசந்திரன் வண்டின் நிறம் ஒரு முகம் (௧௧௮) அஞ்சலிஹஸ்தம் எல்லா ஆபரணங்களு மணிந்தவருய் த்யானித்து வாயுதிக்கிலுள்ள கெடிகையில் ஓம் ஹாம் பிரசண்டசந்த்ராய நமஃ எனப் பூஜித்து (௧௧௯) பிரசண்டசந்திரன் ஸ்படிகநிறம் இரண்டுகண்கள் ஒருமுகம் அஞ்சலிஹஸ்தம் விபூதிதரித்தவராய் த்யானித்து (௧௨௦) வடக்கேயுள்ள கெடிகையில் ஓம் ஹாம் பிரசாதசந்திராய நமஃ எனப் பூஜித்து பிரசாதசந்திரன் தங்கநிறம் சுகமான இரண்டுகண்கள் (௧௨௧) அஞ்சலிஹஸ்தம் ஒருமுகம் எல்லா ஆபரணங்களும் அணிந்தவராய் த்யானித்து ஈசானதிக்கிலுள்ள கெடிகையில் ஓம்ஹாம் உக்ரசந்திராயநமஃ எனப் பூஜித்து (௧௨௨ உக்ரசந்திரன் அக்னிநிறம் ஒருமுகம் அஞ்சலிஹஸ்தம் இரண்டுகண்கள் இரண்டு பாதம் பிரஸன்னமுகமுடையவராய் த்யானித்து (௧௨௩) இவர்கள் யாவருக்கும் நைவேத்ய தூபதீபார்க்யம் கொடுத்தல்வேண்டும் இதுவரை கிரியாவர்ணபூஜையைச் சொன்னேம் இனி நான்காம் ஆவரண பூஜையை கேட்பாயாக கிழக்கு முதல் ஈசானம் வரையிலுள்ள சராவங்களில் இந்த்ராதி லோகபாலர்களை அந்தந்தத்யானத்தோடு பூஜித்து (௧௨௫) நைவேத்ய தூபதீபார்க்யம் கொடுத்தல்வேண்டும் இனி ஐந்தாம் ஆவரண பூஜையை கேட்பாயாக (௧௨௬) பரிஸ்தரணங்களில் கிழக்குமுதல் ஈசானம்வரையில் வஜ்ராதிகளை தியானத்தோடு பூஜித்து (௧௨௭) நைவேத்ய தூபதீபார்க்யம் கொடுத்தல்வேண்டும் ஔஷதிநாதனுகிய ஏ சந்திரா உனது அமிர்தகிரணத்தால் (௧௨௮) பிரும்மாவின் நாசிகாஜ்வாலையால் முன் வாஸ்துசாந்தியால் தஹிக்கப்பட்ட பூமியை ஞானயாகாங்க ஹேதுவின்பொருட்டு திரும்ப உண்டாகும் (௧௨௯) பாவமுடைய பீஜாவாபனத்தை உமது ஆஜ்ஞையால் செய்கிறேன் அநுக்ரஹம் புரிதல்வேண்டுமென (௧௩௦) பிரார்த்தித்து கும்பத்தில் புஷ்பாஞ்சலிசெய்க வேதிகைக்குக் கிழக்கே எண்கோண குண்டமொன்று போட்டு (௧௩௧) பாலாக்னிவரை ஸம்ஸ்கரித்து பாலாக்னி ஹிருதயகமலத்தில் ஸோமனை பஞ்சாவரணத்தோடு (௧௩௨) பூஜித்து ஏசந்திரஸ்வரூப பாலாக்னியே உனது அமிர்தசமுகத்தால் (௧௩௩) பிரும்மாவின் நாசிகாஜ்வாலையால் முன் பொசுக்கப்பட்ட பிரதேசமானது ஞானயாகாங்க ஹேதுவின்பொருட்டு திரும்ப உண்டான பாவமுடைய (௧௩௩) பீஜாவாபனத்தை உனது ஆஜ்ஞையால் செய்கிறேன் அநுக்ரஹம் புரிதல்வேண்டுமென (௧௩௪)

பிரார்த்தித்து நைவேத்ய தூபதீபார்க்யம் கொடுத்தல்வேண்டும் அங்குரார்ப்பணம் செய்யும் தினத்திற்கு முதலிலேயே அங்குரங்களை அதிவாசனம் செய்தல்வேண்டும் (கக௫) தங்கம் அல்லது வெள்ளி அல்லது தாம்ரம் அல்லது மண் இவ்வாறுள்ள உத்தம மத்யம அதம அதமாதம மென்னும் சராவ பாத்திரங்களில் பால்விட்டு (கக௬) எள்ளு, கடுகு, பாசிப்பயர், உளுந்து, கடலை, துவரை, கொள்ளு முதலிய ஏழு தான்யங்களை (கக௭) பாலில் முன்சொன்ன பாத்திரத்தில் அதிவாசனம் செய்தல்வேண்டும் மூன்றுநாள் அல்லது ஒருநாள் அதிவாஸனம் செய்க (கக௮) அதிவாசனம் செய்யாவிடில் பஞ்சம் பிராணிநாசம் உண்டாகும் அதிவாசன பீஜங்களை வாகீஸ்வரியின் (கக௯) கர்ப்பநாடியில் சம்யோஜித்து மூலமந்திரத்தால் ஆயிரம் அல்லது இநூற்பாதி இதிலும்பாதி அபிமந்திரித்து (க௨0) ஸ்தண்டிலம்போட்டு பத்மமண்டலத்திற்கு நடுவில் வைத்து நூற்றெட்டு அக்ரமுள்ள தர்ப்பைகளாலே பீஜபாத்திரத்தை தொட்டுக்கொண்டு (க௨க) முன்சொன்ன மூலமந்திரத்தினால் அபிமந்தரித்து நைவேத்ய தூபதீபார்க்யம் கொடுத்து (க௨உ) வேதகோஷம் மங்களாசரணம் வீணை, புல்லாங்குழல், மிருதங்கம் சங்கம், நிருத்தம், கானம், திராவிடவேதபாராயணம் (க௨௩) வாத்யகோஷத்துடனும் பீஜாவாபனம் மூலமந்திரம் உச்சரித்து கிழக்குமுதல் ஈசானமிறுதியாகவுள்ள பாலிகைகளில் செய்தல்வேண்டும் (க௨௪) தான்யக்கதிர்களை கெடிகைகளில்போட்டு அஸ்தரமந்தரமுச்சரித்து ஜலத்தை பூரித்தல்வேண்டும் (க௨௫) ஹிருதயமந்திரத்தால் சராவத்தில் ஜலத்தை பூரித்தல்வேண்டும். இவ்வாறு செய்தபின் சர்க்கரைபொங்கல் பாயசம் (க௨௬) வடை அதிரசம் முறுக்கு கற்கண்டு வெள்ளரிக்காய், பேயாப்பழம், நீர்மோர்முதலியவற்றையும் (க௨௭) நைவேத்தியதூபதீபார்க்யம் செய்தல் வேண்டும் ஓஷதிசூக்தத்தால் ஸ்தோத்ரம்செய்தல்வேண்டும் (க௨௮) இவ்வாறுசெய்யப்படும் அங்குரார்ப்பண உத்தமாங்குரார்ப்பணமென்பதாம் இந்த அங்குரார்ப்பணம் ஆவிருத்தபிரதிஷ்டையிலும், அனாவிருத்தபிரதிஷ்டையிலும்புனராவர்த்தபிரதிஷ்டையிலும் செய்யவேண்டுமென்பதாம் (க௨௯) மத்யமாங்குரார்ப்பணம் உத்ஸவத்தில்செய்யத் தக்கதும் அதமாங்குரார்ப்பணம் தீக்ஷாபிராயச்சித்தத்தில் செய்யத்தக்கதுமாகும் (க௩0) இனிமத்யமாங்குரார்ப்பணத்தை கேட்பாயாக. வேதியில்நெல்லுஅரிசிமுதலியவற்றைப்பரத்திகிழமேல்தென்வட

டலாக ஐந்தைந்துகோடிட்டு(௧௫௧)இதற்குநடுவேநான்குபதத்தை ஒன்றாகச்சேர்த்து எட்டிதழ்,கமலம்போட்டு (௧௫௨) கர்ணிகையின் நடுவில்ஸோமகும்பத்தையும்இதற்குவலமிடபுறங்களில்(௧௫௩) கிருத்திகாரோகிணிகும்பத்தையும் வைத்துஇதற்குவெளியேபன்னிரண்டுபாலிகைகளைஸ்தாபித்து வைகர்த்தனர்முதல் (௧௫௪) இவாகரன்வரை பூஜித்து அக்னிகார்யம்செய்து பீஜாவாபனம்செய்தல்வேண்டும் (௧௫௫) இனி அதமாங்குரார்பணத்தைகேட்பாயாக ஸ்தண்டிலத்தைப்பரத்தி எட்டிதழ் கமலமெழுதி (௧௫௬) கர்ணிகைக்குநடுவில் ஸோமகும்பத்தையும் இதற்கு இரண்டு பார்ச்வத்திலும் (௧௫௭) கிருத்திகாரோகிணிகும்பங்களையும் தளாக்ரத்தில் எட்டுப்பாலிகைகளையும் வைத்து பூஜிப்பது அதமாங்குரார்பணமாகும் (௧௫௮) இதற்கு அக்னிகார்யம்வேண்டுவதில்லை பீஜாவாபனம்மட்டும் செய்தல்வேண்டும் இந்த அங்குரார்பணபூஜைபிரதினமும் யாகசாலைமுடியும்வரை இரண்டுகாலத்திலும் பூஜித்துவருதல்வேண்டும் (௧௫௯) பிராதக்காலத்தில் முதலில் சூரியனைப்பூஜித்து பின்சந்திரனைப்பூஜித்து யாகசாலைபூஜைபுரிதல்வேண்டும் சாயங்காலத்தில் முதலில் சந்திரனையும் பின் சூர்யனையும் பூஜித்து யாகசாலைபூஜைபுரிதல்வேண்டும் (௧௬௦) இந்தப்பாலிகை வைக்குமிடம் காத்து வெய்யில்அல்லாததும் மூஞ்சூறுஅல்லாததுமான இடங்களில்வைத்தல்வேண்டும் (௧௬௧) இதன்முளை கிருஷ்ணவர்ணமாயிருந்தால் ரோகமும் பஞ்சமுமுண்டாகும் மஞ்சள்நிறம் ரக்தவர்ணமாயிருந்தால் விசேஷபலனைத்தரும் (௧௬௨) புகைநிறமாயிருந்தால் சத்துருவால் பயமுண்டாகும் வெளர்ந்திருந்தால் சுபத்தைக்கொடுக்கும் குட்டையாயும் குறுக்காயுமிருந்தால் அஸ்த்ரமந்திரம் உச்சரித்து (௧௬௩) இந்தமந்திரத்தால் தோஷநிவர்த்தியின்பொருட்டு ஹோமம் செய்தல்வேண்டும் இந்த அங்குரயாகசாலையில் அகண்டதீபம் வைத்தல்வேண்டும் (௧௬௪) அகண்டதீபத்தை பிரதிஷ்டித்து இது அணைந்துவிட்டால் ராஷ்டிரநாசம்உண்டாகும் இந்த தீபத்திற்குத்தைலம் பசுவின் நெய்உத்தமம்அல்லது எருமைநெய் (௧௬௫) ஆட்டுநெய் மத்யமம் இலுப்பநெய் அதமம் தேங்காய்நெய் எள்ளெண்ணெய் இவைகளும் போடலாம்(௧௬௬) இதற்கன்யமான விருக்ஷத்தின் விரையாலுண்டாகும் எண்ணெயாலும் பாஷாணம் கந்தகம் மண்ணெண்ணெய் மாம்சத்திலுண்டான நெய் (௧௬௭) சாறுயம் விளக்கெண்ணெய் வேப்பெண்ணெய் பாஷாணத்தால் உண்

டாகும் வெளிச்சம் ஒயினால் உண்டாகும் தைலம் இவைகளால்
விளக்கு போடுவாராயின் (௧௬௮) ஈஸ்வரசான்யத்யம் குறைந்துவி
டும், பிசாச பூதக்கூட்டங்கள் வாஸஸ்தானமாய் முடிந்துவிடும்
(௧௬௯)இதனால் ஆத்மார்த்தபூஜையிலும் முக்தியைத்தருளும் பரா
ர்த்த பூஜையிலும் இந்த தைலங்களை நீக்குதல்வேண்டும் (௧௭0)
சாஸ்திரத்தில் கூறிய தைலங்களை சங்கரஹித்து அகண்டதீபம்
பிரதிஷ்டத்தில் வேண்டும் ஆரம்பமுதல் முடிவுவரை இந்த தீபம்
அணையாது எரிந்துகொண்டிருத்தல்வேண்டும் (௧௭௧) இந்தப்பிர
காரம் அங்குரார்பணம் செய்தல்வேண்டும்.
இவ்வாறுகாமிகாகமம் பிரதிஷ்டாதந்திரம் அங்குரார்பணவிதிஎன்
கிற இருபத்தாராம்படலம் முற்றிகைபெற்றது. சு-௧௭௧ ஆ-௪0௪௪

## ஆச்சார்யவரணம் கூறப்படுகிறது.

இதன்பின் ஆசார்யவரணத்தை கேட்பாயாக. சர்வசாதகம்
போதகம் ரித்விஜம் (௧) ஆச்சார்யர் இவர்கள் யாவரும் ஆஸ்தான
மண்டபத்தை யடைந்து நெல்லரிசி, எள்ளு, தான்யாதிகளை (௨)
பாத்தி கிழமேல் தெண்வடலாக பத்து பத்து சூத்திரம்போட்டு
நடுவில் ஒன்பது பதத்தை ஒன்றாகசேர்த்து (௩) பத்மமண்டலம்
கல்பித்து இதற்கு வெளியே கிழக்குதிக்குக்கும் ஈசானதிக்கிற்கு
ம் நடுவே கூர்மாஸனத்திலாவது அல்லது சுகாஸனத்திலாவது(௪
ஆசார்யர் உட்கார்ந்து இவரைச்சுற்றிலும் ரித்விஜர்களை உட்கார
ச்செய்து இவருக்கு முன்னால் சர்வசாதகர் கூர்மாசத்திலேனும்
சுகாஸனத்திலேனும் உட்கார்ந்து (௫) இவருக்குமுன்னால் போத
கர் சாதகரோடுகூட முன்கூறியபடி உட்கார்ந்து உட்காரும்முறை
யாகசாலையில் ஹோமத்திற்கு கூறியவாறு திக்குநோக்கி உட்காரு
தலும் வேண்டும் (௬) ஆசார்யருக்கு முன்னே பஸ்மாலையும் பீதா
ம்பரம் பட்டு தங்க யக்ஞோபவீதம் (௭) நவரத்னங்களால் இ
ழைக்கப்பெற்ற குண்டலம் மோதரம் தங்க அரணுள் கேயூரம் கட
கம் பஸ்மாலையும் நவரத்னங்களால் இழைக்கப்பெற்றது விசேஷ
மென்பதாம் நவரத்னகசிதமான பாதுகை ஒன்று உஷ்ணீஷம்
உத்தரீயம் பவித்ரம் தர்ஜனி தங்கத்தாலும் ரத்னங்களாலும் இ
ழைக்கப்பெற்ற ருத்ராக்ஷம் சிரோமாலை உரோமாலை பாகுமாலை
யோகபட்டம் இவ்வாருள்ள பிரதிஷ்டாதி திரவியங்களை சேக

ரித்து (கக) தாம்பாளத்தின்மேல் வைத்து ஆசார்யருக்கு முன்
ஞல் வைத்தல்வேண்டும் ஆசாரியார் சாமான்யார்க்யஜலத்தால் இ
ந்த திரவியங்களைப்ப்ரோக்ஷித்து (கஉ) நிரீக்ஷணுதிசுத்திகள் செய்
து பத்மமண்டலத்திற்குமேல் ஆதாராதி சலாசனம்வரை பூஜித்து
(கங) ஓம் ஹாம் விருஷபாயநமஃ எனப்பூஜித்து ரிஷபம் வெண்
மை நிறம் நான்குகால் நிமிர்ந்த முகம் (கச) வெளுத்தகொம்புமூ
ன்று கண்கள் மணிசலங்கைகளால் அலங்கரிக்கப்பட்டரிஷபத்தை
பிரும்ம விஷ்ணு ருத்ர திருமூர்த்திஸ்வரூபமாய் (கரு) த்யானித்
து ஆவாஹித்து ஸ்தாபனுதி முத்திரை காட்டி நைவேத்யதூபதீ
ப உபசாரங்கள்செய்தல்வேண்டும் (கசு) இந்தத்திரவிய தாம்பாள
த்தை பத்மமண்டலத்தின்மேல் வைத்துபதத்திற்குவெளியே(கஎ)
கிழக்கு திக்கிலாகிலும் வடக்கு திக்கிலாகிலும் நெல்லரிசியைப்பர
த்தி இதன்மேல் விருத்தாகாரமாக்கி எஜமானனை (கஅ) இதில்
உட்காரச்செய்து சாமான்யார்க்யஜலத்தால் ப்ரோக்ஷித்து நிரீக்ஷ
ணுதி சுத்திசெய்து(ககூ)சிவஹஸ்தம்கற்பித்து திரவியபாத்திரத்
தை அவர்கையில் கொடுத்து ஆசார்யரின்பொருட்டு கொடுத்தல்
வேண்டும் (உ0) கொடுக்கும் பொழுது செய்யப்படும் த்யானமா
வது ஹே குருவே எல்லாதத்வார்த்தஸ்வரூபமாயுள்ள சிவஞான
த்தை சொல்லக்கத்தக்கவரே இந்த சிவயாகத்தின் பொருட்டு கொ
டுக்கப்படும்திரவியங்களை ஏற்றுக்கொண்டு என்னைரக்ஷித்தருளவே
ண்டுமென (உக) பிரார்த்தித்து எல்லாதிரவியங்களையும் ஆச்சார்யரி
ன்பொருட்டு கொடுத்தல் வேண்டும் ஆச்சார்யர் எல்லாதிரவியங்க
ளையும் அலங்கரித்துக்கொண்டு (உஉ) சிஷ்யன் ஆச்சார்யபூஜனம்
செய்தல்வேண்டும் ஆதாராதிவிமலாசனம் வரைஆசார்யரைப் பூஜி
த்து சிவாசனமூர்த்திமூலத்தாலும் பூஜித்து (உங) ஈசானமந்திர
த்தாலும் பூஜித்து மூர்த்திபர்களை தத்புருஷம் முதல் சத்யோஜா
தமிருதியாக பூஜித்து (உச)வித்யாதேஹம் மூலம் நேத்திரமந்தி
ரங்களால் ஆச்சார்யரைபூஜித்து ஹிருதயாதிஷடங்கங்களினுல்மூர்
த்திபர்களை பூஜித்து (உரு) சர்வசாதகரையும் போதகரையும்சாத
கரையும் சிவமந்திரத்தால் பூஜித்து இவர்கள் யாவருக்கும் (உசு)
நைவேத்ய தூபதீபார்க்யம் கொடுத்து ஹே குரோ சிவமாகவும்
சிவாகமங்களில் கூறப்படுகின்றதுயாதொருசிவமுண்டோஅதுவே
குருவெனக்கூறப்படுகின்றது (உஎ) குருவாயிருப்பினும்ஞானம் பி
ரகாசித்து விளங்கவேண்டும் சிவம் பரத்தை யென்றும் அந்த வித்

தையேகுருவெனவும் (௨௮) சிவம் பரவித்தை குரு இவர்களை பூ ஜிப்பது எல்லாப் ஓம்ரபலனைத்தருமெனவும் பிரார்த்தித்து நைவே த்யதூபதீபம் கொடுத்து (௨௯) சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்தல் வேண்டும் நமஸ்கரித்தசிவபக்தன் நெற்றியில் விபூதியால் அடித தல்வேண்டும் (௩௦) என்னால்சேகரிக்கப்பட்ட எல்லா சிவத்ரவியங்க ளையும் சிவாகமத்தில் கூறியவாறு (௩௧) மந்திரம் கிரியை பாவனை இவைகள் யாவும் சம்பூர்ணமாய் செய்து என்னை சிவபக்திநிறைந்த றனுய் அனுக்ரஹித்தல்வேண்டுமென ஆசார்யரை பிரார்த்தித்தல் வேண்டும் (௩௨) ஆசார்யம் அப்படிக்கே உண்டாகட்டுமென சிஷ் யனுக்கு அனுக்ரஹித்து வேதகோஷமங்களவாசகஙிருத்த கீதவா த்யசஹிதமாய் ரக்ஷாயாக சாலையில் பிரவேசித்தல்வேண்டும் (௩௩) இவ்வாறு காமிகாகமம் பிரதிஷ்டாதந்தரம் கிரியாபாதம் ஆசார்ய வரணவிதி யென்கிறபத்தொன்பதாம்படலம் முற்றுகைபெற்றது.

சலோகம் ௪௦. ஆக ௪௩௨௫.

---

## ரக்ஷாபந்தனம் கூறப்படுகிறது.

இதன்பின் ரக்ஷாபந்தனத்தை சொல்லுகிறேன்கேட்பாயாக கலாகர்ஷணத்திற்குமுன் ரக்ஷாபந்தனஞ்செய்தல் வேண்டும் (௧) பிராதக்காலத்தில் ரக்ஷாபந்தனமும் ராத்திரியில் கலார்ஷணமும் செய்க (௨) கலாகர்ஷணத்திற்கு முதநாளிலாவது அடுத்த நாளி லாவது ரக்ஷாபந்தனம் செய்தல் கூடாது (௩) மோகத்தால் செ ய்வாராகில் இந்த இராஜ்யம் ரோகத்தால் பீடிக்கப்படும் ரக்ஷாபந் தனமன்றியில் பிரதிஷ்டை செய்தல் கூடாது (௪) செய்வாராகில் கர்த்தா போக்தா இவ்விருவர்களும்நாசத்தையடைவார்கள் ரயெ ன்பது பிரகாசமும் க்ஷா என்பது நாசம் எனவும் (௫) எல்லா தோஷத்தையும் போக்கி சிவஞானப்பிரகாசத்தை உண்டாக்குவ தால் ரக்ஷை யென இதற்கு திருநாமம் கூறப்படும் (௬) லோகத் திற்கு ஹிதத்தின் பொருட்டும் பிராணிகளுக்கு சுகத்தின்பொரு ட்டும் ராஜாவிற்கு ஜெயத்தின் பொருட்டும் தேசக்ஷேமத்தின் பொருட்டும் (௭) எல்லாமங்களகாரியங்களிலும் ரக்ஷை செய்து கொள்ளல்வேண்டும் ரக்ஷையின் பொருட்டு மண்டபம் யாகசாலை க்கு வெளியே (௮) ஈசானத்தில் மூன்று முழஅகலமுள்ளதாயும் இதிற்பாதி உயரமுடையதாயும் ஊர்த்வபட்டி அதோ பட்டிகை யோடுகூடியதாயும் (௯) உள்ளேவேதிகையைபோட்டு இதற்குமுன்னுல்

சதுரஸ்ரகுண்டம்போட்டு இப்படிக்கில்லாவிடில் ஸ்தண்டிலத்திலா
வது இதுவுஞ்சரிப்படாவிடில் (௧௦) அங்குரார்ப்பணத்திற்குள் ரக்ஷை
செய்துகொள்க இனிவேதிகையின்மேல் நெல்லு அரிசிதான்யங்களை
(௧௧) பரத்திபத்மமண்டலம்போட்டு கர்ணிகைக்குநடுவே நாகராஜ
கும்பமும் (௧௨) இதற்கு இடப்புறத்தில் வர்தனீகும்பமும் ஸ்தாபித்
து சுற்றிலுமுள்ள தளாக்ரங்களில் அஷ்டநாககும்பங்களைஸ்தாபிக்க
அரிசி பரத்துவதற்கு முன் கோமயத்தால்மெழுகி (௧௩) மாப்பொ
டிகளினாலே அலங்கரித்து இதற்குமேல் நெல் அரிசிகளைப் பரத்தி
இதற்குமேல் கும்பஸ்தாபனம் செய்தல்வேண்டும் (௧௪) சர்வசா
தகன் போதகன் சாதகன் ஆசார்யர் ரித்விஜர் ஸ்தானீகர் யாசகர்
(௧௫) பரிசாரகர் முதலியவர்களோடு கூட ஆசார்யர் நிருத்த கீத
வாத்யத்தோடுகூட ரக்ஷாமண்டபத்தை யடைந்து (௧௬) கூர்மாஸ
னத்திலேனும் அல்லது சுகாஸனத்திலேனும் வடக்கு நோக்கி உ
ட்கார்ந்து ஆசார்யர்ஸகளீகரணம் செய்து சாமான்யார்க்யம்வைத்
து (௧௭) அந்த அர்க்யஜலத்தால் அஸ்த்ரமந்திரமுச்சரித்து தன்
சிரஸில் சர்வத்ரவியங்களிலும் ப்ரோக்ஷித்து மணியை மூலமந்திர
ம் உச்சரித்து மும்முறை யடித்து சங்கல்பம் செய்து (௧௮) விக்
னேஸ்வரபூஜை மஞ்சளிலேனும் திரப்பவித்திரத்திலேனும் செய்து
நைவேத்யதாபதீபார்க்யம்கொடுத்து (௧௯) பராமுகார்க்யத்தினு
ல் விக்னேஸ்வரரை உத்வாசித்து சைவபுண்யாகவாசனம் செய்து
இந்த ஜலத்தால் ப்ரோக்ஷித்து (௨௦) பஞ்சகவ்யம்வைத்து இதனு
ல் புரோக்ஷித்து இதில் மிச்சமான பஞ்சகவ்யத்தை ஆசார்யன்மு
தலியோர் சாப்பிட்டு (௨௧) பின்கும்பபூஜை செய்தல் வேண்டும்
தங்கம் முதலிய நூலினால் சுற்றப்பட்டதாயும் அலம்பினதாயும் தூ
பப்புகைகாட்டினதாயும் (௨௨) தங்கத்தாமரைப்பூ நவரத்னம் அந்
தகூர்சம் லம்பகூர்சம் மாந்துளிர் இவைகளோடு ஜலத்தால் நிர
ப்பப்பட்டதான (௨௩) கும்பங்களை கர்ணிகாமத்யத்தில் வர்தனீ
கும்பத்தோடு கடம் ஸ்தாபித்தல் வேண்டும் இதற்குவெளியேசு
ற்றிலும் எட்டுகும்பங்களை ஸ்தாபித்து (௨௪) வேதிகைக்குகிழக்கில்
ஸ்தண்டிலம்போட்டு அஷ்டதளபத்மமண்டலம் போட்டு இதற்கு
மேல் யந்திரிகையைவைத்தல்வேண்டும் (௨௫) தங்கம் அல்லது
வெள்ளி அல்லது தாம்பரம் அல்லது மரத்தாலேனும் யந்திரிகை
ஒருமுழவிஸ்தாரமும் மூன்று காலோடும் உயரப்பலகாகிருதியாய்
இரண்டு அங்குலகனம் (௨௭) நடுவில் பத்மாகாரமாய் யந்திரிகை

யை கற்பித்து இதற்குமேல் தங்கத் தாம்பாளம் வைத்து (உஅ) இதற்குமேல் தங்கநெல் ஷை அரிசி இவைகளைப்பரத்திபத்மாகார மண்டலம்போட்டு (உகூ) தங்கத்தாமரைப்பூ பஸ்மாலையம் பழங்கள் வெல்லம் வெற்றிலைபாக்கு சந்தண அக்ஷதை (௩0) புஷ்பம் பவித்ரம் மஞ்சள் கூர்ச்சம் பட்டு இவ்வாறுள்ள திரவியங்களைசே கிறித்தத்தங்கத்தாம்பாளத்தில் வைத்தல்வேண்டும் (௩க) தங்கம் வெள்ளி அல்லது பட்டுக்களினுலாவது செய்துள்ள ரக்ஷாசூத்ரத்தைவைத்துபிரதானகும்பத்தில்பூஜித்தல்வேண்டும் (௩உ) நிராதார ஆஸனத்தைப்பூஜிக்காது (௩௩) ஆதாராதிபத்மம்வரைபூஜித்து இதற்குமேல் ஓம் ஹாம் ஆதிசேஷாஸனயநம: ஓம்ஹாம்ஆதிசேஷ மூர்த்தயேநம; ஓம்ஹாம் ஆதிசேஷாயநம: எனப்பூஜித்து(௩ச) ஆதிசேஷன் பால் நிறம் நாகராஜஸ்வரூபம் ஆயிரம் முகம் இரண்டாயிரம்கண்கள் (௩ரு) எட்டுகைகள் கத்தி பாசம் கதை குடாரம் டங்கம் நாகம் அங்குசம் வஜ்ரம் இவைகளோடு கூடியதாய் (௩கூ) சிரஸுக்கு கீழ்புருஷாகிருதியாய் எல்லா ஆபரணங்களு மணிந்தவராய் த்யானித்து ஆவாஹித்து ஸ்தாபனுதிமுத்ரைகாட்டி (௩எ) நைவேத்யதூபதீபம் கொடுத்தல்வேண்டும் ஓம் ஹாம் நாகராஜமூர்த்தாயநம: எனப்பூஜித்து (௩அ) நாகராஜமூர்த்தா ஆயிரம் தலை சிரஸுக்குமேல் படத்தோடுகூடியதாயும் தலைக்குக்கீழ் புருஷாகிருதியாய் (௩கூ) த்யானித்து ஓம் ஹாம் நாகராஜவக்த்ராய எனப் பூஜித்து நாகராஜவக்த்ரம் நூறுதலை (ச0) படத்தோடுகூடியதாய் சிரஸிுக்கு கீழ் புருஷாகிருதியாய் த்யானித்து ஓம் ஹாம் நாகராஜ ஹிருதயாயநம: எனப்பூஜித்து (சக) நாகராஜஹிருதயம் ஐம்பது முகம் கீழ்புருஷாகிருதியாய் எல்லா ஆபரணங்களும் அணிந்ததாய் த்யானித்து(சஉ)ஓம் ஹாம் நாகராஜகுஹ்யாயநம: எனப் பூஜித்து நாகராஜகுஹ்யம் இருபத்தைந்துமுகம் (சச) சிரஸ்பாம்பின் ஆகிருதி சிரஸுக்கு கீழ் புருஷாகிருதியாய்த்யானித்து ஓம் ஹாம்நாகராஜபாதாப்யாம்நம: எனப்பூஜித்து நாகராஜபாதம் இரண்டுமுகம் பாம்பின்படம் வண்டின்நிறம் குஞ்சிதம் தலைக்குக்கீழ் புருஷாகிருதியாய்த்யானித்து (சகூ) ஓம்ஹாம்நாகராஜவித்யாதேஹாயநம:வித்யாதேஹம்ஸ்படிகநிறம்மதுமின்மை (சஎ) ஒருமுகம் நான்குகைகள் வரதம் அபயம் சூலம் பாசம் வெள்ளைவஸ்திரம்தரித்ததாய் (சஅ) வெள்ளைமாலையணிந்ததாய் எல்லாஆபரணங்களும

ணிந்ததாய்தியானித்து ஓம்ஹாம்நேத்ரேப்யோநம: எனப்பூஜித்து பிங்களம்தூம்ரவர்ணம்ஹேமவர்ணம் இவைகளோடுநேத்திரங்கள் கூடியதாயும் பாம்பின்உருவம்மூன்றுதலைகள் எல்லா அவயவங்களும்நல்லலக்ஷணத்தோடுகூடியதாய்த்யானித்து(௫0)ஓம் ஹாம் ஹிருதயாயநம: எனப்பூஜித்து நாகராஜஹிருதயம் வண்டின்நிறம் ஒருதலை (௫௧) பாம்பின்படத்தோடுகூடியதாய் மூன்றுகண்கள்சுபமாயுள்ளதாய்த்யானித்து ஓம்ஹாம்சிரஸேநம: எனப்பூஜித்து (௫௨) நாகராஜசிரஸ் ஆயிரம் தலைபடத்தோடு கூடியதாய்சிரஸுக்கு கீழ்புருஷாகிருதியாய் எல்லா ஆபரணங்களுமணிந்ததாய்(௫௩) த்யானித்து ஓம்ஹாம்ஶிகாயைநம: எனப்பூஜித்து நாகராஜஶிகை ரக்தவர்ணம் ஒருமுகம்(௫௪) பாம்பின் தலைதலைக்குகீழ் புருஷாகிருதியாய்த்யானித்து ஓம்ஹாம் நாகராஜகவசாயநம: எனப்பூஜித்து (௫௫) கவசம்கருப்புநிறம் இரண்டுகைகள்ஒருமுகம்அஞ்சலிஹஸ்தம் சர்பாகிருதியானசிரஸோடு கூடியதாய்தியானித்து (௫௬)ஓம் ஹாம்அஸ்த்ராயநம: எனப்பூஜித்துஅஸ்திரம் ஜோதிஸ்வரூபமாய் உக்ரமானதாய்நான்குமுகங்கள் (௫௭) அஞ்சலிஹஸ்தம் எல்லா ஆபரணங்களுமணிந்ததாய் த்யானித்து இவர்கள்யாவருக்கும்நைவேத்யதூபதீபார்க்யம்கொடுத்து (௫௮) இதற்குஇடபக்கத்திலுள்ள வர்தனீகும்பத்தைபூஜிக்க ஓம்ஹாம் நாககன்னிகாஸநாயை நம: ஓம்ஹாம்நாககன்னிகாமூர்த்தயே நம: ஓம்ஹாம்நாககன்னிகாயைநம: (௫௯) நாககன்னிகைவெண்மைநிறம் ஊர்த்வகண்கள் இரண்டுகைகள் பாம்பின்முகம் திரிபங்கம்பத்மாஸனத்தின்மேல் இருப்பவளாய்சிவந்தகண்களையுடையவளாய்(௬0)த்யானித்து நைவேத்யதூபதீபார்க்யம் கொடுத்து இதுவரை பிரதமாவரணபூஜையை சொன்னேனும் இனித்வதீயாவரணபூஜையைகேட்பாயாக (௬௧) இதற்குவெளியேநான்குபக்கத்திலும் கிழக்குமுதல் ஈசான்யம் வரையில் அனந்தர்முதல்மஹாபத்மம்வரையில் (௬௨) எட்டுகும்பங்களிலும் பூஜிக்கவேண்டும் கிழக்குகும்பத்தில் ஓம்ஹாம்அனந்தாயநம: எனப்பூஜித்து (௬௨)அனந்தம் மிச்ரவர்ணம்பத்துதலை அஞ்சலிஹஸ்தம் பாசசூலம்விபூதி ருத்ராக்ஷமணிந்ததாய் (௬௪) த்யானித்துதெற்குதிக்கில் ஓம்ஹாம்வாசுகியேநம:எனப்பூஜித்து வாசுகிசங்கவர்ணம் ஏழுதலை (௬௫) அஞ்சலிஹஸ்தம் சூலம்பாசம் எல்லா ஆபரணங்களுமணிந்ததாய் த்யானித்துமேற்குதிக்கில் ஓம்

ஹாம்தக்ஷகாயநம: எனபூஜித்து (சுசு) தக்ஷகம்இந்திரநீலநிறம் ஐந்துமுகம்அஞ்சலிஹஸ்தம் பத்மமுடையவராய் (சுஎ) த்யானித்து வடக்குதிக்கில்ஓம்ஹாம் கார்கோடகாயநம:எனப்பூஜித்துகார்கோடகம் புகைநிறம் எட்டுதலை(சுஅ)வராபயம்கண்டைநாகம் டங்கம்சூலம்குடாரம்கேடகம்க்ஷுரிகைசக்தி அங்குசம்மிருகம்அக்னி (சுகூ) கபாலம்அக்ஷமாலைவில்லுபாணம் இவைகளோடுகூடியதாய் தியானித்து அக்னேயகும்பத்தில் ஓம்ஹாம்சங்கபாலாயநம: என பூஜித்து (எ0) சங்கபாலம்வெண்மைநிறம் ஐந்துமுகம்அஞ்சலிவில்லு, பாணம்கதைசக்தி பாசம் (எக) ஸ்ருக்ஸ்வமங்குசம், இவைகளோடுஎல்லாஆபரணங்களும் தரித்ததாய் த்யானித்துநிருதிகும்பத்தில் ஓம்ஹாம்குளிகாயநம:எனப்பூஜித்து (எஉ) குளிகம்சியாமளாகாரம் நான்குமுகம் சூலம் பரசு டங்கம் விசிரிஉலக்கை (எங) தோமரம்த்வஜம் சங்கம்இவைகள் எட்டுகையில்விளங்குவதாய் தியானித்து வாயுகும்பத்தில் ஓம்ஹாம்பத்மாயநம: எனப்பூஜித்து (எச) பத்மன்ரக்தவர்ணம்ஐந்துதலை இருபதுகைகள் இருபதுகைகளிலும் சக்தியையுடையதாய்தியானித்து (எரு) ஈசானகும்பத்தில் ஓம்ஹாம்மகாபத்மாயநம:எனபூஜித்து மஹாபத்மன் காக்காய்பொன்னிறம் இருபதுதலைமுப்பத்திரண்டுகைகள் எல்லாகைகளிலும் சூலத்தை தரித்தவருய் தியானித்து (எஎ) யாவர்களுக்கும் நைவேத்தியதூபதீபாதிகள்செய்க இதுவரைஇரண்டாமாவரணத்தைசொன்னேம் இனிமூன்ருமாவரணத்தைகேட்பாயாக (எஅ) தளங்களின் நுனியில்கிழக்குமுதல் ஈசானமிருதியாகஎட்டுதிக்குக்களில் கிழக்கில்ஓம்ஹாம்உரகாயநம:எனப்பூஜித்து (உரகம்தங்கநிறம் ஒருமுகம்இரண்டுகண்கள் பாம்பின்படம்எல்லாஆபரணங்களும்அணிந்ததாய் (அ0) தியானித்துஅக்கினிதிக்கில் ஓம்ஹாம்போகினேநம: எனப்பூஜித்து போகினிரக்தவர்ணம் இரண்டுகைகள்அஞ்சலிஹஸ்தம் (அக) சர்பாகிருதியானதலை விபூதியும்அணிந்துள்ளதாய் தியானித்துதெற்குதிக்கில்ஓம்ஹாம்பன்னகாயநம: யென பூஜித்து (அஉ) பன்னகன்தாமரைப்பூநிறம் ஒருமுகம்பாம்பின்படம்அஞ்சலிஹஸ்தம்பெரியவாலோடு கூடியதாய்(அங)தியாநித்து நெருதிதிக்கில் ஓம்ஹாம்புஜங்காயநம: என பூஜித்துபுஜங்கன்தாமரவர்ணம் இரண்டுகைகள் சங்குசக்ரம் (அச) தலை பாம்பின்தலைசிரஸிற்குகீழ்புருஷாகிருதியாய் தியானித்துமேற்குதிக்கில் ஓம்

ஹராம்காளாயநம: யெனபூஜித்து (௮௫) நாகம்பச்சைநிறம்பாம்பி ன்படம்எல்லா ஆபரணங்களும் எல்லாபுஷ்பங்களும் அணிந்ததாய (௮௬) தியானித்துவாயுதிக்கில் ஓம்ஹராம்நீலாயினமஃ யெனபூஜித்து நீலன்இந்திரநீலநிறம் பெரியபடத்தோடு கூடியதலை (௮௭) பெரியவால்இரண்டுகைகளிலும் தாமரைப்பூ உடையதாய்தியானித்து வடக்குதிக்கில் ஓம்ஹராம் காளகண்டாயநமஃ எனபூஜித்து (௮௮) காளகண்டன்வண்டின்நிறம் பாம்பின்படத்தால்விளங்குபவருய் சிரஸுக்குகீழ்புருஷாகிருதியாய் பாணங்களோடுகூடியவருய் தியானித்து (௮௯) ஈசானதிக்கில்ஓம்ஹராம் கிரீவாயநமஃஎன பூஜித்து கிரீவம்வெண்மைநிறம்பாம்பின்தலை (௯௦) இரண்டுகண்கள் அஞ்சலிஹஸ்தம் சிரஸிற்குகீழ்புருஷாகிருதியுடையவருய் தியானித்து இவர்கள்யாவருக்கும்நைவேத்ய தூபதீபாதிகளசெய்க (௯௧) இவ்வாறுமூன்றுமாவரணம் கூறினேம் இனிநான்காமாவரணத்தைகேட்பாயாக. வேதிகாக்ரத்தின்கிழக்குமுதல் ஈசானம் வரையிலும் (௯௨) ஈசானத்திறகுதெற்கிலும் நிருதிக்கிவடக்கிலும் இந்திரர்முதலானலோகபாலர்களை தியானத்தோடு பூஜித்து (௯௩) இவர்கள்யாவருக்கும் நைவேத்ய தூபதீபங்கொடுக்க இதுவரை நான்காம்ஆவரணம் சொன்னேம். இனிஐந்தாம்ஆவரணத்தைகேட்பாயாக (௯௪) வச்சிராதிபத்மபர்யந்தமான தசாயுதங்களைபட்டிகையைச்சுற்றிலும் பூஜித்துநைவேத்திய தூபதீபங்களை செய்க (௯௫) தங்கத்தினுலாதல் வெள்ளியினுலாதல் தாம்பிரத்தினு லா த ல் அ ல் ல து ம ர த் தி னு ல ா கி லு ம் யெ ந் திரிகை செய்தல்வேண்டும் யெந்திரிகையின்மேல்போடும்பலகை இருபதுஅங்குலம் இந்தஇருபதுஅங்குலம்அகலமாகும் (௯௬) இதற்குபன்னிரண்டு அங்குலஉயரம் மூன்றுகால்நாட்டல்வேண்டும் (௯௭) அருகோணமாயாவது அல்லது விர்த்தாகிருதியாயாவது செய்தல்வேண்டும். பலகைக்குமேல்கர்ணிகையோடும் எட்டுதளங்களோடும்கூடிய தாமரைப்பூபோடுதல்வேண்டும் (௯௮) ரெக்ஷாபந்தனதிரவியபாத்திரத்தை இதற்குமேல்வைத்தல்வேண்டும் யெந்திரிகைக்குகீழேயுள்ள கிழக்குதெற்குவடக்குதிக்குக்களில் இருக்கிற (௯௯) மூன்றுபாதங்களில்ராஜஸதாமஸ ஸாத்வீககுணங்களை தியானத்தோடுபூஜிக்க (௧௦௦) யெந்திரிகைக்குமேல்ஆத்மதத்வ வித்யாதத்வ சிவதத்வங்களை அதினதின் அதிபதியோடு தியானத்தோடும்பூஜிக்க (௧௦௧) யெந்திரிகையின்ஈசானதிக்கில்மஞ்சள் பொடியினுல்விருத்தாகாரம்போட்டு எழுகுருக்களைபூஜித்து(௧௦௨

சிவஞானத்தைகொடுப்பவருயும் உள்ளஹேருகரோ சிவயாகத்தி
ன்பொருட்டு ரக்ஷை செய்யப்படுவதை விக்னமன்றியில்நிறை
வேற அநுக்கிரஹித்தல்வேண்டுமென (௧௦௩) பிரார்த்தித்துநை
வேத்யதூபதீபங்கள்கொடுத்து ரக்ஷாபந்தனம் வைத்திருக்கும்
பாத்திரத்தில் ஆதாரசக்திமுதல்பத்மாஸனம்வரையுள்ள (௧௦௪)ச
லாஸனத்தைபூஜித்து பாத்திரத்தில்ஓம் ஹாம் பிரகிருதிசத்துவா
யநம:என பூஜித்து (௧௦௫) முன்னமேயேஅனுதியாய்ஸ்தாபித்து
ள்ளதும் பிரகிருதியெனபெயர் கொண்டதும் விகிருதிமுதலியத
த்வங்களுக்கு ஆதாரரூபமாய் (௧௦௬) தியானித்து அரிசிகளில்
ஓம்ஹாம்சப்தகோடிமஹாமந்திராயன நம: யெனபூஜித்து(௧௦௭)
சப்தகோடிமஹாமந்திரம் எழுஅக்ஷரங்களும் அக்ஷரங்களுக்கு
ஆதாரரூபமாய் இருத்தலால் சிதாகாசஸ்வரூபமாய் (௧௦௮) தியா
னித்துவிபூதிபாத்திரத்தில் ஓம்ஹாம் மாயாசக்தயேநம:யென பூ
ஜித்து மாமைசாமளாகாரம் ஒருமுகம்வராபயம் (௧௦௯) கட்கம்சூ
லம் எல்லாஆபரணங்களும் அணிந்துள்ளவாளாய் தியானித்துவி
பூதியில் ஓம்ஹாம்லெகுளிச்சுவராயநம: யெனபூஜித்து (௧௧௦) மு
ம்மூன்றுகண்கள்மூன்றுதலை ஆறுகைகள்விபூதி உத்தூளனம் வல
க்கையில்சின்முத்திரை (௧௧௧) இதற்கன்னியமானஇரண்டுகை க
ளில் பாவித்தை அபாவித்தைஇடக்கைமூன்றிலும் வரதம் ஜபமா
லை கமண்டலம் (௧௧௨) தங்கநிறம்ஜெடைபூணூல் இவைகளோடு
கூடியலகுளிசனர்மந்தஹாஸமுடையவராய் எல்லாஆபரணங்களும்
அணிந்தவராய்தியானித்து (௧௧௩) தங்கம்அல்லதுவெள்ளி அல்ல
துபட்டுபருத்திபஞ்சிலாவது செய்யப்பட்டரக்ஷாசூஸ்திரத்தி
ல் ஓம்ஹாம்நாகராஜாயநம: யெனபூஜித்து (௧௧௪) நாகராஜன்பசுவி
ன்பால்நிறம் இரண்டாயிரங்கண்கள் வராபயம் டங்கம் கிருஷ்
ணன் ஆபிரம்படத்தோடுகூடியவராய்(௧௧௫)கிருயானித்துரக்ஷா
பந்தனவலயத்தில் ஓம் ஹாம் வாசுகையேநம: யெனபூஜித்து வா
ஸுகிசங்கின்நிறம் ஒருமுகம் பாம்பின்படத்தின்தலை (௧௧௬) நான்
குகைகள் அஞ்சலிஹஸ்தம் சூலம் பாசம் இவைகளோடுகூடியவ
ராய்தியானித்து ரக்ஷாபந்தனம் முடிச்சில் ஓம்ஹாம் அக்னயே
நம:யெனபூஜித்து (௧௧௭) அக்கினி எழுநாக்கு அக்ஷமாலை கமண்
டலம் சுவாலைமாலை ரெத்தவர்ணம் ஆட்டின்மேலிருப்பவராய்தியா
னித்து (௧௧௮) ரக்ஷாசூத்திரத்தில் ஓம்ஹாம் திரயம்பகாய நம:

யெனபூஜித்து திரயம்பகர் மூன்றுதலை ஒவ்வொருதலைகளிலும்
மும்மூன்று கண்கள் (கககூ) ஆறுகைகள் வராபயம் பாசம் சூலம்க
ண்டையில்லு ஜடாமகுட முடையவராயும் (கஉ0) விபூதிருத்திராக்ஷ
எல்லா ஆபரணங்களும் அணிந்தவராய் தியானித்து இவர்கள்யாவ
ருக்கும் நைவேத்திய தூபதீபாதியங்கொடுத்து (கஉக) புஷ்பத்
தை கையில் எடுத்து அஞ்சலி செய்துகொண்டு நாகராஜாவே
எல்லாகர்மங்களிலும் அசுத்தத்தை நிவர்த்தித்து (கஉஉ) சுத்திக
ரித்தற்பொருட்டு ரக்ஷாபந்தனம் செய்கிறேன் அனுக்கிரஹம்பு
ரிந்து என்னைரக்ஷித்தல்வேண்டுமென பிரார்த்தித்து (கஉங) வே
திகைக்குமுன்னால் உள்ள சதுர்சகுண்டத்தில் பாலாக்னிவரை ச
ம்ஸ்காரஞ்செய்து பாலாக்னிஹிருதயத்தில் (கஉச) நாகராஜனை
ஆவாகித்துபஞ்சாஸன பஞ்சாவரணம்பூஜித்து இந்தமந்திரத்தால்
(கஉரு) எல்லா திரவியங்களையும நாகராஜமூலமந்திரம் ஆயிரம் அ
ல்லது ஐந்நூறு அல்லது இருநூற்றைம்பது சங்கைகளால் ஓமம்
செய்து (கஉசு) பூர்ணாகுதிசெய்து ரக்ஷாசூத்திரத்தை வாகீஸ்வ
ரிகர்பமுடியில் உண்டானதாய் பாவித்து (கஉஎ) நைவேத்தியதூ
பதீபங்கொடுத்து ஓம்ஹாம் சிவாயனம: யென மூலமந்திரம்உச்
சரித்து (கஉஅ) விபூதியினால் ரக்ஷாசூத்திரத்தில் தடவி வேத
கோஷம் மங்களவாக்கு நிர்த்தனம் வாத்யம் (கஉகூ) சங்ககோஷம்
இவைகளோடுகூட அகோரமந்திரம் உச்சரித்து சர்வசாதகரெ
க்ஷாசூத்திரத்தை எடுத்து (கங0) ஆச்சாரியருடைய வலக்கையில்
கட்டுதல்வேண்டும் ஆச்சார்யரால் மைத்துள்ள யாவர்களுக்கும்
ரக்ஷாபந்தனம் செய்தல்வேண்டும் (கஙக) ரக்ஷாபந்தனத்தின்
முடிவில் மூலமந்திரம் உச்சரித்து விபூதிவைத்தல்வேண்டும் சர்
வசாதகர் போதகர் ருத்துவஜர் (கஙஉ) ஸ்தானீகர் அர்ச்சகர் பாச
கர் பரிசாரகர் இவர்கள் யாவருக்கும் ஆச்சார்யனால் ரக்ஷாபந்த
னம்செய்தல்வேண்டும் (கஙங) ரக்ஷை அன்றியில் யாகசாலையில்
பிரவேசித்தல்கூடாது சர்வசாதகர் போதகர் (கஙச) இவர்கள் ர
க்ஷை அன்றியில் இருந்தால் தோஷமாகாது இவர்களுக்குஆசௌ
ச்சம் வரின் ரக்ஷை இல்லாதவரை நீக்கவேண்டிவரும் இதனால்
ரக்ஷை இருந்தால்நிரகித்துக்கொள்ளலாம் (கஙரு) ரக்ஷையும்யாக
சாலையுள்பிரவேசிப்பதற்கு ஆதிசைவவர்களுக்கேசெய்தல் வேண்
டும் அன்னியர்களுக்கு செய்தல் கூடாது நிர்த்தனஞ்செய்யும் தாசி

கள் வாத்தியம் வாசிப்பவர் இவர்கள் யாவரும் (கஙசு) வாஸ்துசாந்தி செய்யும் சமயத்தில் வாத்தியபூஜையிலேயே செய்துகொள்ளல் வேண்டும் இப்படி செய்துகொண்டால் இவர்களை ஆசௌசம்பற்றாது இவர்கள் யாகசாலைக்கு வெளியே (கஙஎ) நின்று நிர்த்தகீத வாத்தியங்களை வாசித்தல் வேண்டும் பாவித்தியாசொரூபமான சிவாகமங்களை அத்தியயனம் செய்பவர் (கஙஅ) ரெக்ஷையோடுகூடியிருந்தால் இவர்களை ஆசௌசம் பற்றாது ஆதிசைவகுலத்தில் உண்டானவர்களே சிவாகமபடனம் செய்தல்வேண்டும் (கஙகூ) யாகசாலையின் உள்ளே பிரவேசிப்பதற்கு யோக்கியர் ஆவார்கள் இவர்களுக்கு அன்னியமான பிராம்மணர்கள் பிரவேசித்தால் ராஜ்யம் நாசத்தை அடையும் (கச0) இந்ததோஷசமனத்தின்பொருட்டு அகோராஸ்த்ரமந்த்ரம் நூறு ஆகுதிசெய்தல்வேண்டும் ருக்கு யஜுஸ் சாமம் அதர்வணம் முதலிய வேதங்களை யாகசாலையின் வாசற்படிக்கு வெளியேயிருந்து (கசக) அத்யயனம் செய்தல் பொருட்டு இவர்களும் ரெக்ஷாபந்தனம் செய்துகொள்ளல் வேண்டும் மஹாசைவர் முதலிய பிராம்மணர்கள் ரெக்ஷையோடுகூட (கசஉ) அத்யயனம் செய்தல் விசேஷமாகும். இவர்களுக்கு ஆசௌசமும் கிடையாது ரெக்ஷாஹீனர்களாயிருந்தால் பிரதிஷ்டாமத்தியில் ஆசௌசம்வந்தால் (கசங) தள்ளுபடிசெய்யத்தக்கவர்களாவார்கள் இந்த ஆசௌசத்தோடு வேதாத்யயனம் செய்தால் தோஷமாய்முடியும் திராவிடவேதமாகிய தேவாரதிருமுறைகளுக்கும் ரெக்ஷையோடுகூடியிருந்தால் தோஷமாகாது (கசச) ரெக்ஷையின்றியில் இருக்கும்தருணத்தில் ஆசௌசம் வந்தால் இவ்வாருள்ள யாவர்களையும் பிரதிஷ்டையில் நீக்குதல் வேண்டும் இதனால் ஸர்வபிரயத்தினங்களாலும் ரெக்ஷாபந்தனம் செய்துகொள்ள வேண்டியது அவசியம் (கசரு) வேதாத்யயனம் செய்பவர் யாகசாலையின் வாசற்படிக்கு வெளியேயிருந்து அத்யயனம் செய்தல் வேண்டும். இவர்கள் வாசல்படிக்குஉள் செல்வாராயின் ராஜராஜ்யம் நாசத்தை யடையும் (கசசா) இத்தோஷபரிகாரமாய் ஸ்நபனம் சாந்திஹோமம் செய்தல் வேண்டும் இந்தபிரகாரம் ரெக்ஷாபந்தனத்தைசெய்துகொண்டு (சஎ) இதன்பின் கும்பஸ்தாபனத்தைசெய்வாயாக இவ்வாறு காமிகாகமம் பிரதிஷ்டாதந்திரம் கிரியாபாதம் ரெக்ஷாபந்தனவிதியென்கிற முப்ப[illegible]படலமுற்றுப்பெற்றது. சு. கசஎ ஆக சசஎரு.

## கும்பஸ்தாபனம் கூறப்படுகின்றது

இதன்பின் கும்பஸ்தாபனத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக கும்பம் அஸ்திரத்தின் ஸம்ஸ்காரத்தினால் தேவதாகாராத்மகமாய் ஆக்குதல் வேண்டும் (௧) ஸம்ஸ்காரமில்லாத கும்பத்தை நீக்குதல் வேண்டும் ஸம்ஸ்காரம் சுத்தம் மிச்சிரம் கேவலமெனமூன்றும் (௨) ஆஸனம் மூர்த்தி, மூலம் இவைகளோடும் தியானத்தோடு பூஜிப்பது சுத்தமெனவும் வேதங்கூட்டி பூஜிப்பது (௩) மிச்ரமெனவும் வேதம் தியானமுமல்லாமல் நாமாந்தமாய் பூஜிப்பது கேவலமெனவும் ஆவர்த்தம் அனாவர்த்தம் (௪) புனராவர்த்தம் இவ்வாறுள்ள பிரதிஷ்டைகளில் சுத்தமார்க்கத்தினாலேயே செய்தல் வேண்டுமெனவும் தைத்திருகவிஷ்டபர்க்கில் மிச்சரமும் அந்தியபஷ்டியாகில் கேவலமும் செய்தல் வேண்டுமெனவும் (௫) மோகத்தால் இதற்கு விரோதமாய்ச் செயில் ராஜ்யக்ஷோபம் உண்டாகும் சம்சயமில்லை யெனவும் கர்ப்பக்கிருகத்திற்கு வெளியேயாதல் அல்லது அர்த்தமண்டபத்திலாதல் (௬) மஹாமண்டபத்திலேயாவது கும்பஸ்தாபனத்தின் பொருட்டு மூன்று முழவிஸ்தாரமும் விஸ்தாரத்தில் பாதி உயரமும் (௭) அல்லது இதற்குசமமாயாவது வேதிகைபோட்டு கண்ணாடிக்குசமமாய் உபவேதி போட்டு ஊர்த்வபட்டி, அதோபட்டி கல்பித்து (௮) வேதிகைக்கு மேல் பவைஅரிசி பாசிப்பயர் உளுந்து கோதுமை தொவரை எள்ளு முதலிய தான்யங்களை (௯) யவையாவது அல்லது நெல்லாவது நூறுபடி பரத்துதல் உத்தமம் ஐம்பதுபடி மத்யமம் இருபத்தைந்துபடி அதமமுமாகும் (௧௦) நெல்லிற்பாதி அரிசி அரிசியிற்பாதி எள்ளு எள்ளிற்பாதி பாசிப்பயர் கோதுமை உளுந்து முதலியவைகள் இவைகளை (௧௧) வேதிகைக்குமேல் பரத்தி தர்ப்பைபுஷ்பங்களால் அலங்கரித்து இந்ததான்யங்களுக்கு கர்ணிகையோடுகூடிய எட்டு இதள் பத்மமண்டலம் கல்பித்து (௧௨) தங்கத்தால் செய்யப்பட்ட கும்டம் உத்தமம் வெள்ளிமத்தியமம் தாம்பிரம் அதமம் மண் அதமாதமமாகும் (௧௩) செய்துவைக்கும்கர்த்தாவின் திரவ்யத்தையனுஸரித்து பிரதானகும்பம் செய்தல் வேண்டும் பிரதானகும்பம் முப்பத்தாறுபடி தண்ணீர் கொள்ளும்படியானதாய் இருத்தல் வேண்டும் இதில்பாதிதண்ணீர் பிடிக்கும்படியானதாய் வர்தனியும் இதற்குபாதி அஷ்டவித்தேச்வரகும்பங்களையும் கிரஹித்து (௧௫) இந்தகும்பத்தில் நவரத்னங்கள் போட்டு பத்துவிராகனிடை எடையுள்ளதாய்

தங்கத்தால் செய்த காமரைப்பூ ஒன்றுபோட்டு (கரு) இந்தகாமி
ரைப்பூ முன்சொன்ன எடையிற்பாதியாவது அல்லது இதில்பாதி
யாவது இருக்கவேண்டும் தங்கத்தால்செய்த நீலோத்பலம் மேற்
படி அருகுபிரதிமைகள் (கஎ) அந்தகூர்ச்சம் ஸப்தகூர்ச்சமாக்யோ
பவீதம் தங்கநூல் (கஅ) தங்கமாவிலை ஜடைக்குசமமான மாதளம்
பழம் இவைகளை வைத்து சிரசிற்குசமானமான தேங்காயும்வைத்து
சிரசிக்குசமானமானதங்கத்தேங்காயும்வைத்து (கசு) பட்டினல்
செய்யப்பட்ட பீதாம்பரங்களை தோலுக்கு சமானமாய்கும்பத்தை
சுற்றிகட்டி (உ0) இவ்வாறு அலங்கரித்து ஆசார்யர் சமையசந்தி வி
சேஷசந்தி இவ்விரண்டையும் செய்து (உக) பஞ்சாங்கபூஷணகுண்
டலாலங்கிருதராய் வேதிகைக்கு தெற்கே கூர்மாஸனம் அல்லது
சுகாஸனத்தில் (உஉ) வடக்குநோக்கிஉட்கார்ந்து சங்கல்பம் செ
ய்து விக்னேச்வரபூஜை செய்து புண்ணியாகவாசனம் செய்து (உ௩)
இந்த புண்ணியாகவாசன ஜலத்தால் ப்ரோக்ஷித்துகும்பத்தையும்
திரவியங்களையும் ப்ரோக்ஷித்து ஸகளீகரணம் அனுக்ரஹகிரஹபூத
சுத்தி (உச) அந்தர்யஜனம அஷ்டத்திரிம்சத்கலாந்யாசம் தண்டாங்
கி, முண்டபங்க்தி கலாபங்க்தி, வக்ரபங்க்தி (உரு) அந்தர்மாத்ருகைசிவ
ஹஸ்தம் முதலியவைகளை செய்து ஆஸனரூபமான தான்யங்களை
பூஜிக்க (உசு) கும்பத்திற்கு முன்னால் சாமான்யார்க்யம் கல்பித்து
அந்தஜலத்தால்கும்பங்களை ப்ரோக்ஷித்து (உஎ) நிரீக்ஷணாதி சுத்தி
செய்து தேனுமுத்திரைகாட்டி ஆஸனரூபமான தான்யங்களில்யவை
யில் ஓம் ஹாம் விருஷபாயநம: யென பூஜித்து (உஅ) வ்ருஷபம் வெ
ள்ளிநிறம் நான்குகால் ஊர்த்வமுகம் கொம்பு அருணப்ரகாசம் வெ
ண்மையான மூணு கண்கள் (உகூ) கழுத்தில்சலங்கை கிங்கிணி ரு
த்திராக்ஷனும்பிரமதிருமுருகத்தில்ஸொருபமாய் (௩0) தியானித்து
அரிசிகளில் ஓம் ஹாம் குமாராயநம: யென பூஜித்து குமாரன் அரு
ணப்பிரகாசம் ஒருமுகம் நான்குகைகள் (௩க) வராபயம் வச்சிரம்
சக்தியோடுகூடினராய் தியானித்து பாசிபயற்றில் ஓம் ஹாம் வருண
யநம: என பூஜித்து (௩உ) நாகபாசத்தை தரித்தவரும் ரத்னாப
ரணதரித்தவராயும் சந்திரனைப்போல்வெளுத்துள்ளவரும் முத
லையின்மேல் ஏறியிருப்பவராயும் (௩௩) தியானித்து உளுந்தில் ஓம்
அக்னயேநம: யெனப்பூஜித்து அக்கினிமூன்றுக்கு அக்ஷமாலைகம
டலம் (௩ச) ஜ்வாலாமாலை ரத்தவர்ணமுடைய சக்தியுட்டின்

மேல்ஏறி இருப்பவராய் தியானித்து கோதுமையில்ஓம் ஹாம் சந்த
ராயநம: எனபூஜித்து(௩௫)சந்திரன் ஸ்படிகநிறம் இரண்டுகைகள்
அஞ்சலிஹஸ்தம் ஒருமுகம் இரண்டுகண்கள் எல்லா ஆபரணங்களுமணிந்தவராய்(௩௬)தியானித்து துவரையில்ஓம் ஹாம் சுக்ராயநம:
எனபூஜித்து சுக்ரன் மணிதர்மேல்உட்கார்ந்திருப்பவரும் நல்லகர்
வமுடையவரும்(௩௭)தங்கநிறம்கதையை கையில்உடையவரும் தியா
னித்து எள்ளில்ஓம் ஹாம் தேவ்யைநம:எனபூஜித்து (௩௮) தேவி
தங்கநிறம் ஒருமுகம் மூன்றுகண்கள் வரதாபயசூலபாசம் உடைய
வராய் (௩௯) தியானித்து இதற்குமேலுள்ள கர்ணிகைக்கு நடுவில்
ப்ரதானகும்பத்தையும் அதற்குஇடப்பாகத்தில்வர்தனிகும்பத்தை
யும்(௪௰)எட்டுதலங்களிலும் அஷ்டவித்யேஸ்வரகும்பங்களையும் ஸ்
தாபித்துகும்பத்தின் அடியில்ஆத்மதத்வம் ஆத்மதத்வாதிபதிபிர
மாவையும்தியானத்தோடுபூஜித்து (௪௧) நடுவில்வித்யாதத்வத்தை
யும்வித்யாதத்வாதிபதிவிஷ்ணுவையும்தியானத்தோடுபூஜித்து நு
னியிலசிவதத்வத்தையும்சிவதத்வாதிபதிருத்ரனையும்தியானத்தோ
டுபூஜித்து(௪௨)கும்பத்தில்சக்தியை தியானத்தோடுபூஜித்து கும்ப
த்தில் சுற்றப்பட்டமுவ்விழைநூல்களில் சரஸ்வதி,லக்ஷ்மி (௪௩)
ரௌத்ரி இவர்களை தியானத்தோடுபூஜித்து கும்பத்தினுள் ஸிதாரி
முதலிய வாஸனைத்தானபுகைகளை(௪௪)பிடித்து அந்தப்புகையில்
ஓம் ஹாம் ஹருஷ்ண்யைநம: எனபூஜித்து ஹருஷணிதங்கநிறம்
இரண்டுகைகளில்தாமரைப்பூ (௪௫) ஒருமுகம்இரண்டுகண்கள் எ
ல்லா ஆபரணங்களும்அணிந்தவளாய் தியானித்து (௪௬) உத்தம
ம் தீர்த்தங்களைநிறைத்துகும்பத்தில் கிழக்குமுதல்ஈசானம்வரை
(௪௭) கங்கைமுதல்குமாரிஇறுதியாக தியானத்தோடுபூஜித்து கு
ம்பமத்தியத்தில்வருணனை தியானத்தோடுபூஜிக்க (௪௮) வருண
ன்சந்திரகாந்திஇரண்டுகைகள் அஞ்சலிஹஸ்தம்ஜடாமகுடம் விபூ
திருத்ராக்ஷமணிந்தவராய் தியானித்து இந்தஒன்பதுதீர்த்தங்களையு
ம் சிவாங்கமாய்கல்பிக்க கும்பத்திற்குள் ஒன்பதுரத்னங்களைபோ
டுதல்வேண்டும் (௫௰)கும்பநடுவில்ரத்னத்தைப்போட்டு மனோன்ம
ணியை தியானத்தோடுபூஜித்துபிரதானகும்பத்தின் கீழ்பாகத்தில்
வஜ்ரத்தைபோட்டுவாமாசக்தியை தியானத்தோடுபூஜிக்க (௫௧)
அக்னிதிக்கில் வைடூர்யத்தைபோட்டு ஜ்யேஷ்டாசக்தியைதியான
த்தோடுபூஜிக்கதெற்குதிக்கில்கோமேதகத்தைப்போட்டு ரௌத்ரி.

ரதிஷ்டை இவ்விரண்டும் ஐடத்வபாவமுடையதுபற்றி சித்ஸ்வரூ
பமான சிவபெருமானிடத்திற்கபிறத்தல்கூடாவாம் (உ) அமிருதா
வைவஸ்வதா ஜீவஹா பிராணஹா ஆகர்ஷணீ கிரந்திரீ பிரமாதா
விஸ்புலிங்கினீ (ங) அப்பிரதிஹதா எனதுதிகா ஒன்பதுபேதங்
களாகும் எருமைமாடுமுதலியபலிகளோடுகலாகர்ஷணம் இந்தவ
தாதிகை கலாகர்ஷணஞ்செய்தல் வேண்டும் (ச) இதுசாக்தகலா
கர்ஷணமென்பதாம் சைவத்திற்கு இப்பலியுடன்கலாகர்ஷணஞ்
செய்தல்கூடாதெனவாம் சாக்தகலாகர்ஷணம் சாக்தர்களும் சை
வகலாகர்ஷணம் சிவாகமஞ்யானஆதிசைவ பிராப்பணதியருக்கு
ம் உரித்தானவை (ரு) மோஹத்தால் இதற்குவிரோதமாகச்செய்
வாராகில் இராஜராஷ்டிரன்னுசத்தை அடையும்-சுச-கலைகள்சை
வாகமங்களில் கூறியிருப்பதால் (சு) இந்தஅறுபத்துநான்கும் ஐ
ந்துகலையிலடங்கியிருக்கும், இவைகள் அகாரகலைஎனவும் உகாரக
லை எனவும் மகாரகலைஎனவும் பிந்துகலைஎனவும் நாதகலைஎனவும்
ஐந்துபிரகாரங்களாகும் (எ) அகாரகலையில்பத்து கலைகளும்உகார
த்தில் பதினாறுகலைகளும் மகாரத்தில் இருபத்துநான்குகலைகளும்
பிந்துவில்நான்குகலைகளும் (அ) நாதத்தில்பத்துகலைகளுமாக
சுச-இவ்வைந்துகலைகளிலிருக்கின்றன, அகாரகலைபிரும்மபாகத்
தினின்றும் உகாரகலை விஷ்ணுபாக (கூ) த்தினின்றும் மகாரகலை
ஆவடாயாருக்குமேலுள்ளது, ருத்ரபாகமாகும். இந்தருத்ரபாகத்
தை ஏழாகபங்கிட்டு (க0) மகாரம் ருத்திரபாகம் இதன்மேல் பிந்
துகலை நாதகலைஎனமூன்று பாகங்களில் ருத்ரமஹேசுவர ஸதாசி
வாதிகளையும் (கக)கர்பித்து இதற்குமேல் நான்குபாகங்கள் கலா
தீதமாய்க்கொள்ளப்படும் இந்நான்குபாகங்களும் ஆவாகனத்தா
ல் ஸான்னித்யமடையத்தக்கவைகள். (கஉ) சிவபெருமான்ஒன்பது
பேதமான அங்கமுடையவர். இவைபிரும்மாவிஷ்ணு ருத்திரர் ம
ஹேசுவரர் ஸதாசிவபிந்துநாதசக்தி (கங) சிவமென ஒன்பது பே
தங்களாகும். இவற்றின்பேதத்தைக்கூறுவோமாக பிரும்மாவிஷ்
ணு ருத்திரர் இம்மூவர்களும் போகாங்கசரீரமுடையவர்களாவார்
கள் (கச) மஹேசுவரர் ஸதாசிவம்இவ்விருவர்களும் அதிகாராங்
கமுடையவர்களாவார்கள். பிந்து நாதம் சக்திசிவம் நான்கு
ம் லயாங்கங்களாகும் (கரு) கும்பத்தில் போகாங்கலயாங்கத்தை
யும் அக்னியில் அதிகாராங்கத்தையும் கற்பித்தல்வேண்டும் (கசு)
கலாகர்ஷணம் நிசி அதாவது இராத்திரி கரு- நாழிகையில்செய்

வது உத்தமம். இராத்திரிபத்துநாழிகைக்குச் செய்வதுமத்யமம் இராத்திரிஐந்துநாழிகைக்குச் செய்வது அதமம் (கஎ) மத்யானத்திலும் பதினைத்திற்கு பிந்தியராத்திரியிலும் கலாகர்ஷணஞ்செய்தல்கூடாது மோகத்தால் இதற்குவிரோதமாய்ச்செய்வாராகில் பிரஜைகள்நாசமாய்விடும். (கக) கலைசக்திஸ்வரூபமாயிருப்பதால் இந்தசக்திபாகாங்க அதிகாராங்கபூஜாபேதங்களால் கலிங்கத்தினின்று அன்யபிரதேசங்களை அடைந்திருத்தல்பற்றி (உ௦) உஷக்காலம்முதல்அர்த்தஜாமமிருதியாக சக்திகார்யாதிகளால் அன்யபிரதேசத்திலிருக்க (உக) இந்தகாலத்தில் லிங்கத்தினின்றுகலாகர்ஷணஞ்செய்தல்ஒருக்காலுங் கூடாவாம் பின்னெப்படிக்கென்னில் அர்த்தஜாமபூஜைசெய்து (உஉ) சய்யாலயம் அதாவதுபள்ளியறைப்பூஜிக்காது இந்தபள்ளியறைபூஜைக்குமுன் கலாகர்ஷணஞ்செய்தல்வேண்டும்கலாகர்ஷணத்திற்குதங்கத்தினால்உத்தமம்வெள்ளிமத்யமம் (உ௩) தாம்பிரம்அதமம் பட்டினூலதமாதமமாகும். பிம்பங்குப்பமிவ்விரண்டையும் ஒன்பதுபாகமாகச்செய்து (உ௪) முன்சொன்னஸ்வர்ணாதிகளான ஒன்பதுநூல்களைபிம்பம்முதல்குண்டவறைகட்டிகலாகர்ஷஞ்செய்க (உ௫) இதின்பின்போகாங்கலையை பிரும்மபாகத்தினின்று ஆகர்ஷணஞ்செய்க அகாரகலையில்விஜயா ஸளப்யா அம்சுஸம்ஞா திருதி (உ௬) மதனு யந்திரீ மோச்சினீ மாயிகா மோஹினீ போதினி இவ்வாறனபத்துகலாசகதிகளையும் (உஎ) பிம்பத்தினின்று வந்துகும்பத்தில்பிரவேசிக்க வேண்டுமெனவும இவ்வாறு யிருந்து சித்ஸ்வரூபமாய் (உ௮) அவரவர்கள்ஸ்தானங்களிலிருக்கும்படி பிரார்த்திக்க இந்தப்பிரகாரம்தனித்தனிகலாகர்ஷணஞ்செய்க (உ௯) கலாகர்ஷணமுடிவில் ஆச்சார்யர்இடதுகைதலத்தில் ஒருபுஷ்பத்தைவைத்து நிரீக்ஷணாதிசுத்திகளால் (௩௦) சுத்திசெய்துஹிருதயம்வரை அஞ்சலிசெய்துபால்நிறம்நான்குமுகம் பன்னிரண்டுகண்கள் (௩க) கமண்டலம்அக்ஷமாலைலிருக்ஸ்ருவம்புஸ்தகம்வராபயம் தர்ப்பை இவைகளெட்டும் எட்டுகைகளில்விளங்கப்பட்டதாய் (௩உ) எல்லாலோகங்களுக்கும் உத்பத்திகாரணமானபிரும்மாவைபத்துசக்திகளோடுகூடியவராய் பிரதிவிமண்டலத்தில் தியானித்துகும்பத்தில்யோஜிக்க(௩௩)இவ்வாறுதியானித்துஆவாஹிக்க இனிஉகாரகலையைஆகர்ஷணஞ்செய்க உகாரகலையில் குஷ்ணா பத்ரோமா (௩௪) தீப்தா, ஸுதீப்தாபாமகாரிகா ஸுதூம்ரா, பிங்களா, பீதா, வாருணீசிக்ரகா அச்சலா

(௩௫) சசாகாங்கா, லாவபிரபாங்கா, ஞானதா, மோக்ஷதா, பரா இந்த பதினாறுசக்திகளையும் விஷ்ணுபாகத்தில் (௩௬) முன்சொன்னபடி கலாகர்ஷணஞ்செய்க முன்சொன்னபடி ஆச்சார்யர்புஷ்பாஞ்சலிசெய்துஸ்படிகநிறம் நான்குகைகள் மூன்றுகண்கள் (௩௭) சங்குசக்ரம்கதைபத்மம் விபூதிருத்ராக்ஷபூஷிதராயும் அநேக ரத்னங்களாலிழைக்கப்பெற்றகிரீடமுடையவராயும் (௩௮) எல்லா ஜகத்தையும் பரிபாலிப்பவருாயும் பதினாறுகலையோடு கூடியவருன மஹாவிஷ்ணுவை பிம்பத்திலிருந்து கும்பத்திலாகர்ஷணஞ்செய்து அப்புதத்வத்தில் பாவிக்க (௩௯) இவ்வாறுதியானித்தாவாஹித்து மகாரகலையை ஆகர்ஷித்தல்வேண்டும் சிரவணீ, சிராவணீ, ஊர்த்வாயனீ, பாலினீ, (௪௦) ஆஹ்லாதினீ, பிரவாஹா, வியோக்திரீ, ரேசோபவாஹநீ, பிதிருமார்க்காநுகா, தேவமார்க்காநுகா (௪௧) மார்க்கதர்சனி, அர்ப்பணி, பிராணபந்தினீ, சித்தஸ்தா, ஸாக்ஷித்தா, தாம்ரா, தாருவா (௪௨) இவ்வாறுள்ள இருபத்துநான்கு கலாசக்திகளையும் முன்சொன்னபடி ஆகர்ஷணஞ்செய்து முன்போல் புஷ்பாஞ்சலி புருவநடுவரைசெய்து (௪௩) சுத்தமான ஸ்படிகநிறம் மூன்றுகண்கள் சந்திரனைத்தரித்தவராய் வராபயம் மிருகம் சூலமிவைகளை கைகளில் தரித்தவருய் (௪௪) எல்லா அங்கங்களிலும் விபூதி உத்தூளனமுடையவருய் பாம்பை ஆபரணமாக உடையவருய் இருபத்துநான்கு கலைகளோடு கூடியவருய் (௪௫) உள்ள ருத்ரனை பிம்பத்தினின்று கும்பத்தில் ஆகர்ஷித்து அக்னிதத்வமாகிய ருத்ரபாகத்தில் புஷ்பாஞ்சலியை போட்டுவிடுக (௪௬) பிரும்மபாகம் பத்துக்கலையும் விஷ்ணுபாகம் பதினாறுகலையும் ருத்ரபாகம் இருபத்துநான்குகலையும் (௪௭) இவ்வாறுள்ள ஐம்பதுகலைகளும் போகாங்கத்திலுள்ளவைகள் இவை பிம்பத்திலுள்ள கலைகளை (௪௮) கும்பத்திலாகர்ஷிப்பது கலாகர்ஷணமென்பதாம் இந்த போகாங்க கலாகர்ஷணத்தில் மதுபர்க்கம் நிவேதனஞ் செய்தல்வேண்டும் (௪௯) தேன், பால், தயிர், கருப்பஞ்சாறு, இளநீர், விளாப்பழம் (௫௦) வாழைப்பழம், மாம்பழம், பிலாப்பழம், கொளுஞ்சிப்பழம், பச்சைக்குலைமிந்திரிப்பழம், பேரீத்தம்பழம் (௫௧) மாதுளம்பழம், எலுமிச்சம்பழம் இந்தப்பழங்களின் ரஸத்தைப்பிழிந்து ஒன்றாகச்சேர்த்து (௫௨) ஏலம், கிராம்பு, ஜாதிக்காய், ஜாதிபத்திரி, பச்சைக்கற்பூரம், குங்குமப்பூ, கற்கண்டு, சர்க்கரை (௫௩) இவைகளை பொடித்து முன்

பிழிந்துள்ள ரஸங்களில் சேர்த்து கலக்கிவைப்பது மதுபர்க்கமெ ன்பதாம் (௫௪) கலாகர்ஷண ஸமயத்தில் மதுபர்க்கம் நிவேதிக்க வேண்டும் சிதாரிமுதலிய சாம்பிராணிப்புகைகளையும் கற்பூரஹா ரத்தி முதலிய நிராஞ்சனங்களையுஞ் செய்தல்வேண்டும் (௫௫) இ னி அதிகாராங்க கலாகர்ஷணத்தைச்செய்க அதிகாராங்க இரண்டு பேதங்களாகும் இவை மூர்த்திபேதமாயும் (௫௬) அக்னிகார்ய பேதமாயு மிரண்டுபிரகாரங்களாம் மஹேச ஸதாசிவ மிவ்விரண் டும் ஸகள நிஷ்கள வடிவமுடையதாம் (௫௭) தத்வம், தத்வேசுவ ரம், தத்வேசி, மூர்த்தி, மூர்த்தீசுவரன், மூர்த்தீசி இவர்களும் ஸ கள நிஷ்களமாவார்கள் (௫௮) இவ்வாறு கலாகர்ஷணமிரண்டுபிர காரங்களாம் முன்சொன்ன போகாங்கத்திற்குமேல் மஹேசஸ்தா னத்தில் (௫௯) நிவிருத்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி நான்கு கலைகளையும் முன்போல் கலாகர்ஷணஞ்செய்து (௬௦) புருவநடுவ றை அஞ்சலிசெய்து புருவநடுவறை புஷ்பாஞ்சலிசெய்து ஐந்து முகம் பாம்புபூணூல் (௬௧) சந்திரப்பிறை மூன்றுகண்கள் ஸ்படிக நிறம் சக்தி சூலம் பாணம் அக்ஷமாலை டமருகம்கமண்டலம்(௬௨) வராபயம் மான் அக்னி இவைகள் கைகளில் தரித்து சிம்மம் யா னைத்தோலிடுப்பிலுடையவராய் (௬௩) எல்லா ஆபரணங்களும் எல்லாமாலையுமணிந்தவருய் பிந்துவிலுண்டான நிவிருத்திமுதலிய நான்கு கலைகளோடு கூடிய மஹேசுவரனை (௬௪) பிம்பத்தினின் று கும்பத்திலாகர்ஷித்து வாயுதத்வத்தில் பாவிக்க இவ்வாறு தி யானித்து ஆவாஹித்து இதற்குமேல் ஸதாசிவத்தை ஆகர்ஷிக்க (௬௫) இந்திகா, தீபிகா, ரோச்சிகா, மோச்சிகா, ஊர்த்வகா, வி யாபினீ, வியோமரூபி, அனந்தா (௬௬) அநாதா, அநாசிருதா எ ன்னும் பத்து கலாசக்திகளும் நாதத்திலுள்ளவைகள் இவற்றை முன்போலாகர்ஷித்து புஷ்பாஞ்சலி புருவநடுவறை செய்து (௬௭) சந்திரவர்ணம் ஐந்துமுகம் மூன்றுகண்கள் சூலம் டங்கம் வஜ்ர ம் அபயம்சக்திபாசம் (௬௮) கண்டைவரம்அங்குசம் அக்னி இ வைகள்பத்தும் பத்துகைகளிலுடையவராய் கிரீடம்ஹாரம் ஆபர ணங்களணிந்தவருய் (௬௯) நாதகலையிலுண்டான இந்திகாதிசக் திகளோடுகூடிய ஸதாசிவத்தை பிம்பத்தினின்று கும்பத்திலாகர் ஷித்து ஆகாசதத்வத்தில்பாவிக்க (௭௦) திரும்பஅதிகாராங்கமூர் த்திஸம்பேதஜனத்தின் பொருட்டு அக்னிகார்யஞ்செய்து மூர்த் திஹோமஞ்செய்க.

இவ்வாறு காமிகாகமம் பிரதிஷ்டாதந்திரம் கிரியாபாதம் கலாகர்ஷணவிதிஎன்கிற முப்பத்தொன்பதாம்படலம்முற்றிற்று சுலோகம் எ௧. ஆக. ௹௩௯.

## அக்னிகார்யங் கூறப்படுகிறது.

இதன்பின் அக்னிகார்யவிதியைச்சொல்லுகிறேன் கேட்பாயாக அக்னிகார்யத்தில் வைசுவாநராக்னி எனவும் சிவாக்னி எனவும் அக்னி பேதமிரண்டு கூறப்படும் (௧) தேவதாபாவமல்லாதது வைசுவாநராக்னி தேவதாத்மகபாவமுடையது சிவாக்னியுமாகும் (௨) வைசுவநராக்னிஜாடராக்னிரூபமுடையதும் சிவாக்னி சிவரூபமுடையதுமாம் இதனால் வைசுவாநராக்னியைநோக்க சிவாக்னி மேலானதும் இதற்குமேலானவை ஒன்றுமே இல்லை எனவுங்கூறப்படும். (௩) யாகமிரண்டு பிரகாரம். இவைகர்ம்மயாகம் ஞானயாகமென இரண்டாம் கர்ம்மயாகத்தில் வைசுவாநராக்னியும் ஞானயாகத்தில் சிவாக்னியுமாய் உபயோகிக்கத்தக்கது (௪) ஈசுவரன்பிராதன்யரல்ல கேவலங்கர்ம்மமொன்றே பிரதானமெனவாதிக்கும் கர்ம்மவாதிகள் வைசுவாநராக்னியும் ஈசுவரனுண்டென்னும் ஆஸ்திகர்களாகிய எல்லார்களும் சிவாக்னியையும் உபாஸிக்கத்தக்கவர்கள் (௫) இவற்றுள்ளும் சுத்தம்மிச்சிரம் கேவலமென அக்னியின் பேதம் மூன்றாகும் பூதாக்னியைநக்ஷத்திரம் போல் தியானித்து நாபிஅக்னியோடுசேர்த்து (௬) நாபிஅக்னியை பிந்து அக்னியோடு சேர்த்து நூறுசூர்யபிரகாசமுடையதாய் தியானித்து சேதனஸ்வரூபமுடையதாய் சிவமந்திரங்களால்பாவித்து (௭) வாகிசுவரீவாகீசுவரர் கர்ப்பநாடியினின்று வெளிவந்து சிவஸ்வரூபமாய் இந்த சிவாக்னிபாவிக்கப்படுதலின் இதைசுத்தமெனக்கூறப்படும் (௮) ஓம்பூஸ்வாஹா புவஸ்வாஹா ஸுவஸ்வாஹாஎன்னும் இம்மூன்றுமந்திரங்களும் லோகபாவனையாயிருத்தலின் கேவலவேதமந்திரங்களால் கற்பிக்கப்படுவது கேவலாக்னி எனக்கூறப்படும் (௯) முதலில் கேவலாக்னியைச்செய்து அந்த அக்னியில்சிவாக்னிஸம்ஸ்காரஞ்செய்வது மிச்ராக்னிஎன்பதாம் (௧0) ஆதிசைவபிராம்மணர்களாகிய ஆச்சார்யர்களுக்கும் பிரதிஷ்டைஉத்ஸவம் நித்ய பூஜை பிராயச்சித்தம் முதலியவைகளுக்கும் சுத்தாக்னி செய்தல்

வேண்டும் (௧௧) மிச்சிராக்னிமஹா சைவர்களும் தீக்ஷையல்லாத
ஸாமான்யவிப்ரர்கள் கேவலாக்னிவைதிகாக்னியையும் உபாஸிக்க
த்தக்கது (௧௨) சிவாக்னிசுத்தாக்னியெனவும் கேவலாக்னிவைதி
காக்னியெனவும் கூறியதால் வைதிகாக்னியை சிவாக்னியாகக்கற்பி
த்தல் தோஷமாகா (௧௩) சிவாக்னியைவைதிகாக்னியாகக்கற்பித்
தல் தோஷமாய் முடியும் அக்னி அசேதனாக்னி எனவும் சேதனா
க்னியெனவுமிரண்டுபேதங்களாம் (௧௪) இவற்றுள் வைதிகாக்னி அ
சேதனமும் சிவாக்னிசேதனமுமாகும் ஆவர்த்தமனாவர்த்தம் பு
னராவர்த்தம் (௧௫) அந்தரிதம் நித்யபூஜை உத்ஸவம் பிராக்சித்தம்
முதலியவிஷயங்களில் சிவாக்னியைகிரஹித்தல் வேண்டும் (௧௬)
அசேதனாக்னியில் ஹோமஞ்செய்தல் கூடாதாம் மோஹத்தால்
செய்வாராகில் கர்மநாசமுண்டாகும் சிவஸ்வரூபமுடைய சுத்
தாக்னியைச்சொல்லுகிறேன் கேட்பாயாக (௧௭) ஆச்சார்யர் அர்
க்கபாத்திரத்தை எடுத்து அந்தபாத்திரத்தைஸத்யோஜாத மந்தி
ரத்தால் சோதித்து (௧௮) வாமதேவமந்திரத்தால்அலம்பி அகோ
ரமந்திரத்தால் உலர்த்திதத்புருஷமந்திரத்தால் காய்ச்சி ஈசானம
ந்திரத்தால் ஜலத்தைப்ரோக்ஷித்து(௧௯)இவ்வாறுசோதனபு முதல்
புரோக்ஷணமிறுதியாகசெய்யப்பட்டஅர்க்யபாத்திரத்தோடு (௨௦)
ஆச்சார்யர்குண்டத்தை பிரதக்ஷணஞ்செய்து பிரதானகுண்டத்தி
ன்யோனிப்பிரதேசத்தில் (௨௧) கிழக்குமுகமாய் கூர்மாஸனத்தி
லேனும் அல்லது சுகாசனமாயேனும் உட்கார்ந்து மேற்கேயுள்ள
மேகலைக்குவெளியில் (௨௨) நாலங்குலந்தள்ளி ஐந்துதர்ப்பயை வ
டக்கு நுனியாகப்போட்டு இதற்கு மேல் அஸ்திர மந்திரத்தால்
அர்க்யபர்த்திரத்தைவைத்து(௨௩) நிரீக்ஷணாதிஐந்துசுத்திசெய்து
ஜலத்தைப்ரோக்ஷித்து சந்தனாக்ஷதபுஷ்பம் (௨௪) அருகுதர்ப்பை
நுனியவைமுதலியவைகளை அர்க்யத்தில் போட்டு பசும்பால் விட்
டு (௨௫) அர்க்யபாத்திரத்தை பதாகஹஸ்தத்தால்மூடி பிரணவத்
தால் ஏழுதடவை அபிமந்திரித்து (௨௬) ஆத்மாவையும் ஹோம
த்திரவியங்களையும் ப்ரோக்ஷித்து விபூதிதாரணம் சகளீகரணத்
தையும்செய்து (௨௭) சுத்தபுண்யாகவாசனம்செய்து இந்த ஜலத்
தினால் குண்டம் ஹோமத்திரவியங்களை ப்ரோக்ஷித்து (௨௮) வி
சேஷார்க்கியப் பாத்யம் ஆசமனீயம் அவைகளுக்கு மூன்றுபாத்

திரங்கள் வைத்தல்வேண்டும் (௨௯) முன்வைத்துள்ள சாமான்யா ர்க்கிய பாத்திரத்திற்குத்தெற்கே விசேஷார்க்கியபாத்திரம் வைத்து நிரீக்ஷணாதி சுத்திசெய்து பாத்திரத்தின் அடி நடு நுனிகளில் ஆத்மதத்துவ, வித்தியாதத்துவ, சிவதத்துவ முதலியமூன்று தத்வங்களையும் (௩௦) தத்துவாதிபர்களையும் த்யானத்தோடு பூஜித்து, இதற்குமேல் சலாசனம்வரை பூஜித்து (௩௧) பாத்திரத்தில் ஜலத்தைப்பூரித்து சந்தனம் அக்ஷதை புஷ்பம் அருகு தர்ப்பை நுனி குசகுசப்பூ எள் இவை பச்சக்கற்பூரம் (௩௨) ஏலம் கிராம்பு பால் கஸ்தூரி இவை முதலிய த்ரவியங்களை பொடித்து நன்றாக்கி (௩௩) பாத்திரத்தில் போட்டு சிவாசனம் சிவமூர்த்தி சிவமூலம் இவைகளால் பூஜித்து ஈசானமுதல் ஸத்யோஜாதர்வரை பூஜித்து (௩௪) திரும்ப மூலத்தால் பூஜித்து வித்தியாதேகமேந்த்ர நியாசம் பூஜித்து ஹிருதயாதி ஷடங்கங்களை பூஜிப்பது விசேஷார்க்யமென்பதாம் (௩௫) இதை சாமான்யார்க்கித்திற்கு தென்புறத்திலாவது வடபுறத்திலாவது வைத்தல் கூடும் இதற்கு தெற்கில் பாத்தியபாத்திரத்தை வைத்து (௩௬) நிரீக்ஷணாதி பிந்துசுத்திகள்செய்து அஸ்த்ரமந்திரத்தினால் பூஜிப்பது பாத்தியமென்பதாம் இதற்குத்தெற்கில் ஆசமனீயபாத்ரத்தை வைத்து (௩௭) விசேஷார்க்யத்தில் கூறிய த்ரவியங்களை போட்டு நிரீக்ஷணாதி சுத்திகள் செய்து (௩௮) ஹிருதயமந்திரத்தால் பூஜிப்பது ஆசமனீயபாத்திரமென்பதாம். பராங்முகார்க்கியம் நிரோதார்க்கியம் அந்தந்தகாலத்திற்கு தக்கவாறுவைத்துக்கொள்க (௩௯) நிரோதார்க்கியம் ஸன்னிரோதனத்திலும் பராங்முகார்க்யம்விசர்ஜனகாலத்திலும்வைத்துக்கொள்ளுதல வேண்டும் அன்னியக்காலங்களில் வைத்துக்கொள்ளுதல் கூடாது (௪௦) யாகத்திற்கு உபகரணமாயுள்ள த்ருவியங்களை திவ்யதிருஷ்டியால் பார்த்து குண்டத்திற்கு பதினெட்டு ஸம்ஸ்காரங்களைசெய்க (௪௧) கட்டவிரலையும் அனாமிகைவிரலையும் ஒன்றுசேர்த்து தர்ஜனீ மத்தியமை கனிஷ்டிகை இம்மூன்று விரலையும் (௪௨) நேரே நீட்டி இந்த மூன்றுவிரல் நுனியில் வைக்கப்பட்ட பார்வைபோடு கூடியதாய் மூலமந்திர முச்சரித்து குண்டத்தைப்பார்ப்பது நிரீக்ஷணமென்பதாம் (௪௩) சிவாய நமஃ எனவும் சூர்யமண்டலாய நமஃ எனவும் இச்சாசக்தயே நமஃ எனவும (௪௪) அக்னிமண்டலாய நமஃ எனவும் ஞானசக்தயேநமஃ எனவும் சந்த்ரமண்டலாயநமஃ என

வும் கிருயாசக்தயே நம: எனவும் குண்டத்தை பூஜித்து (௪௫) புருவமத்யத்தில் புஷ்பாஞ்சலிசெய்து சிவப்பிரசாதமந்திரத்தை உச்சரித்து (௪௬) வலக்கண், நடுக்கண், இடதுகண் இந்த மூன்று கண்களால் செவ்வயாக பார்க்கப்படுவது நிரீக்ஷணம் (௪௭) வலக்கண் சூர்யரூபமாயும் இச்சாசக்தி, சுரூபமாயும், இருத்தலால் இதனால் பார்ப்பது மண்ணிலுள்ள தோஷத்தை போக்கிவிடும் (௪௮) நடுநேத்திரமாகிய நெற்றிக்கண் அக்னிமண்டலம் ஞானசக்தி சுருபமாயிருத்தலின் இதனால் பார்ப்பது குண்டத்தை பொசுக்கப்பட்ட பாவமாகும் (௪௯) இடது நேத்திரம் சந்திரமண்டலரூபம் கிருயாசக்தி சுரூபமாய் இருத்தலின் இதனால் பார்ப்பது முன்பொசுக்கப்பட்டகுண்டத்தை (௫௦) திரும்ப உண்டானதாக பாவிக்கப்படும் இது குண்டசத்பாவ கல்பனத்தின் பொருட்டு செய்யப்படுவது இந்தப் பிரகாரம் நிரீக்ஷணத்தைச்செய்க (௫௧) கைவிரல்களை நீட்டி விரல் நுனியால் சாமான்யார்க்யஜலத்தால் சிவமந்தரமுச்சரித்து குண்டத்தைப் ப்ரோக்ஷிப்பது ப்ரோக்ஷணமென்பதாம் (௫௨) வாமதேவமந்திர முச்சரித்து தர்பை நுனியால் குண்டத்தைத்தட்டுவது தாடனமென்பதாம் அஸ்த்ராய ஹூம்பட் என அப்புக்ஷணம் செய்தல்வேண்டும் (௫௩) ஓம் ஸ்லீம் பம் சும் ஹூம் பட்என்னும் பாசுபதாஸ்திரமந்திரத்தினால் கெல்லுதல் கனனமென்பதாம் சிரசேனம: என (௫௪) கீருதல் அவகீர்ணமென்பதாம்ஹிருதயாயநம:என பூரணமும்சிகாயைவௌஷடென(௫௫) சமமாகச்செய்தலும் கவசாயநம: எனஸேசனமும் நேத்ரேப்யோநம:என குட்டனமும் (௫௬) சிகாயைவௌஷடெனபெருக்குதல் சம்மார்ச்செனமும் அஸ்த்ராயநம: என சமாலேபனமும் (௫௭) குண்டத்தில் கலாமயாயகுண்டாயநம: எனபூஜிப்பது கலாமயகல்பனமாகும் குண்டத்திற்குமேலேயும் கிழக்குலும் தெற்கிலும் வடக்கிலும் மேற்கிலும் (௫௮) சாந்தியதீதாசாந்தி வித்தை பிரதிஷ்டை நிவற்றி இவைமுதலியகலைகளை பூஜிப்பது (௫௯) கலாபியர்ச்சனமாகும் குண்டத்தின்மேல் மேகலை நடுமேகலை அடிமேகலை இவைகளில் (௬௦) மும்மூன்று நூல்களை சுற்றுவதுதந்துவேஷ்டனமாகும் இப்படிக்கில்லாவிடல்மேல்மேகலையிலாவது நூல்சுற்றுதலும்கூடும் ஊர்த்தமேகலையில் அக்னிமண்டலத்தையும் (௬௧) நடுமேகலையில் சோமமண்டலத்தையும் கீழ்மேகலையில் சூற்யமண்டலத்தையும் பூஜித்தல்வேண்டும் குண்டத்தின் நடுப்பள்ளத்தில்

(௬௨) இரண்டு அங்குலம் நாபிவெளியில் தெரியும்படி விட்டு இப்படிக்கல்லாவிடினும் ஒருஅங்குலமாவதுதெரியும்படி வைத்து (௬௩) புழு, எறும்பு இவைகள் இல்லாததாயும் நகம், மயிர் முதலியவைகள் இல்லாததாயும் உள்ளஉமியை (௬௪) குண்டநடுவில் பரத்தி இதற்குமேல் கிழமேல் தென்வடலாகதனித்தனி நவ்வாலுரேகைகள் போட்டு (௬௫) இந்தரேகை இரண்டுபிரகாரமாகும் கிழமேல் தென்வடல் எட்டுரேகைபோட்டு நவகோஷ்டம்கற்பித்து கிழக்கு முதல் ஈசானம்வரை பவாதி எட்டுமூர்த்திகளையும் (௬௬) நடுக்கோஷ்டத்தில் மஹாதேவரையும் வாமைமுதல் சர்வபூததமனீஇறுதியாக (௬௭) கிழக்குமுதல் ஈசானகோஷ்டம்வரையிலும் நடுக்கோஷ்டத்தில் மனோன்மணியையும் த்யானத்தோடு பூஜிக்க (௬௮) அநேக வர்ணத்தோடு கூடியவர்களாயும் விசித்திரமான ஆபரணங்களை தரித்தவர்களாயும் விசித்திரமான மாலைகளை தரித்தவர்களாயும் விசித்திர வஸ்த்ரங்களை தரித்தவர்களாயும் (௬௯) பிருதிவிமுதல் எஜமானன்வரைதத்வெஸ்வரூபமுடையபவாதி அஷ்டமூர்த்திக்களையும் வமாதிசக்திகளையும் இவ்வாறு பாவிக்க (௭௦) இவ்வாறுத்யானித்து நடுப்பதத்தில் நான்குரேகைகளில்கிழமேல் தென்வடலாக இரண்டு இரண்டு நுனிதர்ப்பைகளைபோட்டு இதற்குநடுவில் (௭௧) மஹாதேவரையும் மனோன்மணியையும் பூஜிக்க ஐந்து முகம் பத்துக்கைகள் சந்திரனைத்தரித்தவராய் (௭௨) வரம் நாகம் தனுசு சூலம் வஜ்ஜிரம் இவைகள் இடதுகைகளிலும் வலதுகைகளில் அபயம் சக்தி சொஸ்திகம் பாசம் அங்குசம் இவைகளுடையதாய் (௭௩) ஜடாமகுடமுடையவராய் விபூதி உத்ராக்ஷபூஷிதராய் ஸ்படிகனிறம் மஹத்தாணகாந்தி ஜ்வலிக்கின்றஅக்னிவர்ணம் (௭௪) எல்லாஆபரணங்களும் அணிந்தவராய் மஹாதேவரை பாவிக்க ரக்தவர்ணம் வெண்மைநிறம் பீதாம்பர மணிந்து (௭௫) நவரத்தினங்கள் அணிந்தவளாய் பச்சைநிறமான துடைஜகனஸ்தலமுடையவளாய் மூன்று கண்கள் சந்தன புஷ்யம் கேசாளக அலங்காரமுடையவளாய் (௭௬) தாமரைப்பூ நீலோத்பலம் வராபயம் கையிலுடைவளாய் மஹாதேவர்க்கு இடதுபுறத்தில் திவ்யமான ரூபமுடைய மனோன்மனியை (௭௭) இவ்வாறு த்யானித்து பூஜிப்பது சதுஷ்பதன்யாஸமெனகூறப்படும் இரண்டங்குலபிரமான தர்பை நுனியைஎடுத்து (௭௮) கிழக்கு நுனியாயுள்ள தர்ப்பையிலும் வடக்குநுனியாயுள்ள தர்பையிலும் சூலாக்கிருதி

யாய் நான்கு சூலம் கற்பிக்க (௭௯) கிழக்கு நுனியாயுள்ள வட
க்கேயுள்ள சூலத்தில் பிரமாவையும் தெற்கேயுள்ள சூலத்தில்
விஷ்ணுவையும் வடக்கு நுனியாயுள்ள மேற்கு சூலத்தில் ருத்தி
ரனேயும் இதற்குகிழக்கேயுள்ள சூலத்தில் மகேஸ்வரனேயும் (௮௦)
பூஜித்தல்வேண்டும் பிரதிஷ்டைமுதலியவற்றில் நான்கு சூலங்க
ளை பூஜித்தல்வேண்டும் (௮௧) மிருத்ஸங்கிரஹணம் வாஸ்துசாந்தி
அங்குரார்ப்பணம் தீக்ஷைபிராயச்சித்தமுதலியவற்றில் நான்குரே
கைகள்போடவேண்டும் (௮௨) கிழக்குமேற்கில் மூன்று ரேகைக
ளும் தெற்குவடக்கில் ஒரு ரேகையும் போடுதல் வேண்டும் கிழ
மேல்ரேகைகளில் பிரும்மா விஷ்ணு ருத்ரர்களேயும் (௮௩) தென்
வடல்ரேகையில் மகேசுவரனேயும் பூஜித்தல்வேண்டும் நுனியோ
டு கூடிய இரண்டு தர்ப்பையை வடக்கு நுனியாயுள்ள கோட்டின்
இரண்டுபக்கங்களிலும் (௮௪) வடக்கு நுனியாகப்போடுவது சதுஷ்
பதான்யாஸமென்பதாம் தென்வடலாகப்போடப்பட்டதர்ப்பை நு
னியில் இரண்டு தர்ப்பைநுனியை இரண்டங்குல நீளங்கிள்ளி தர்
ப்பாக்கிரத்தில் இரண்டோர்சுவங்களிலும்வைத்து சூலம்போல்செ
ய்துகொள்க மேற்கேயுள்ளதிருசூலபத்திரத்தில் (௮௫) பிரும்மா
விஷ்ணு ருத்திரர்களேயும் கிழக்குசூலத்தில் ஸரஸ்வதிவைஷ்ணவி
ரௌத்ரியையும் பூஜித்தல் வேண்டும் (௮௬) இதுவஜ்ரீகரணஸம்
ஸ்காரமென்பதாம் இது குண்டத்திற்குச் செய்யவேண்டியபதினெ
ட்டு ஸம்ஸ்காரத்தைக் கூறினேம் (௮௭) குண்டத்தின் கழுத்தில்
தெர்ப்பயை பரத்துவது அக்ஷபாடமெனக் கூறப்படும் இது தன
து சக்தியால் மறைத்தலென்பதாம் (௮௮) வாகீசுவர வாகீசிஇவ்
விருவர்களுஞ்சேருங் காலத்தில் அக்ஷபாடமிருவருக்கும் ஸமாவ
ரணரூபமாயிருத்தலாலிந்தஸம்ஸ்காரம்பதினெட்டு ஸம்ஸ்காரத்தி
ற்குமேலானது (௮௯) குண்டத்தின்கண்டதேசத்தில் தர்ப்பைக
ளை கவசமந்திரத்தால் பரத்திவைப்பது அக்ஷபாடஸம்ஸ்காரமா
கும் (௯௦) இனிவாகீசவிஷ்டரத்தைக்கூறுவோமாக நுனியோடு
கூடிய-௩௬-தர்ப்பங்களுத்தமம்-௨௪-மத்யமம் ௧௦-தர்ப்பங்களத
மமாம் (௯௧) முப்பதிற்கு குறைதல் கூடாவாம் குறைந்துச்
செய்தால் கர்த்தாநாசத்தை அடைவான் மேற்கூறிய கணக்கின்படி
நுனியுள்ள தர்ப்பைகளைகிரஹித்து பதினெறுவிரர்க்கடைக்குமேல்
(௯௨) முடிந்து அதின்நுனியை மூன்றாகப்பிரித்து பின்னலைப்
போல் பின்னி முன்முடிந்துள்ள இடத்தில் இதன்நுனியைவைத்

து (௯௩) விருத்தாகாரமாய்ச்செய்து முடிச்சிற்குகீழே ஒரு தர்ப்பையால் (௯௪) சுற்றி அடிவரைகட்டிவைத்து வாகீசுவரிவிஷ்டரத்தும் (௯௫) இதை அக்ஷபாடத்திற்குமேல் ஈசானன்முதலியவர்களைவைத்து ஓம் ஹாம் வாகீசுவர்யாஸனாயைநம: வாகீசுவரீமூர்த்தயேநம: வாகீசுவர்யைநம: எனப்பூஜித்து (௯௬) வாகீசுவரி அதஸிபுஷ்பநிறம் பாம்பாபரணமிரண்டுகைகள் பச்சைநிரமான மார்புருதுமதியாயும் எவ்வணப்பருவமுடையவளாயுந்தியானித்து (௯௭) ஆவாஹிக்க பின் ஓம் ஹாம் வாகீசுவராஸனாயநம: வாகீசுவரமூர்த்தயே நம: வாகீசுவராயநம: எனப்பூஜித்து (௯௮) மூன்றுகண்கள் ஐந்து முகம்வெண்மைநிறம் நான்குகைகள் வராபயம் அக்ஷமாலைதாமரைப்பூ இவைகளைகைகளில் த்தரித்தவரும் வியாபகருமுள்ள வாகீசுவரரைத்தியானித்தாவாஹித்து (௯௯) அக்னியைக்கிரஹிக்க சூர்யகாந்தம் அல்லது அரணி ஆதிசைவப்பிராம்மண வீடுகளிலாவது அக்னியைக்கிரஹித்தல்வேண்டும் (௧௦௦) சூர்யகாந்த சிலையால் கிரஹித்த அக்னி உத்தமம் அரணியில் கிரஹித்தல் மத்யமம் (௧௦௧) ஆதிசைவபிராம்மணகிரஹத்தில் கிரஹித்தல் அதமமாகும் அக்னிகார்யத்தை ஆரம்பிப்பதுராத்ரியிலேயே செய்யவேண்டும் (௧௦௨) யாகாரம்பம்மத்யானத்தில்ஒருக்காலுஞ்செய்தல்கூடாது மோஹத்தால் செய்வாராகில் ஜ்வரம் அம்மை முதலியவற்றால் பீடிக்கப்படும் (௧௦௩) சூர்யகாந்தத்திலிருந்துண்டாகுமக்னியை மத்யானத்திலேயே கிரஹித்துவைத்தல் வேண்டும் அக்னி கார்யம் ஹோமம் முதலியவற்றைறாத்திரியில் செய்தல் வேண்டும் (௧௦௪) ஆவர்த்தம் அனுவர்த்தம் புனராவர்த்தம் முதலிய பிரதிஷ்டைகளுக்குயாகாரம்ப ராத்திரியிலேயே செய்தல் வேண்டும் பகலில் செய்தல் கூடாது (௧௦௫) பிராயச்சித்தம் முதலியவற்றிற்கு அந்தந்த காலோசிதம்போல் செய்து கொள்ளலாம் சூர்யகாந்தசிலை அக்னி எடுக்க இல்லாவிட்டால் அரணியில் கிரஹித்தல் வேண்டும் (௧௦௬) இனி அரணி லக்ஷணத்தைக்கேட்பாயாக ஆல் அத்தி அரசு புளி இந்த மரங்களில் (௧௦௭) ஒரு முழம்நீளம் ஆறங்குலகனமாக இரண்டாய் பிளந்து அடியிலும் நுனியிலும் (௧௦௮) நாலங்குலத்திற்குமேல் வளயமாய் கங்கணம்போல் அடையாளஞ்செய்து இந்தக்கட்டைநடுவில் நாலங்குலம் சதுரசிரமாய் பள்ளந்தோண்டி (௧௦௯) இதற்கு நடுவில் மூன்றங்குலத்தில் எட்டிதழ் கமலம்போ

ட்டு இதற்கு நடுவில் ஒருங்குலபள்ளம் மற்றொன்றில் தோன்றி (௧௧0) புளியமுளை அடியிலும் நுனியிலும் ஒருஅங்குலம் இதின் பெருமன் ஆறு அங்குலம் உயரம் ஒருமுழம் (௧௧௧) அடிநுனிக ளின் சுற்றளவு ஒரு அங்குல இதின்னுயரம் ஆறங்குலநுனியில் இரண்டங்குலம் (௧௧௨) இவ்வாறு முளைசெய்து இறுக்குதல்வே ண்டும் பட்டுக்கயறையும் அரணியையும் பட்டுக்கயறையும் குண் டத்திற்கு கிழக்கே (௧௧௩) பத்து தர்ப்பைகளைப் பரத்தி இதின் மேல்வைத்து இதற்கு இடப்புறத்தில் கருப்புப் பஞ்சுவைத்து (௧௧௪) நிரீக்ஷணாதிசுத்திகள் செய்து அரணியை சந்தனாக்ஷத பு ஷ்பங்களாலலங்கரித்துச்சலாஸனம் பூஜித்து (௧௧௫) அடிநடுநுனி பிரதேசங்களில் ஆத்மதத்வம் வித்யாதத்வம் சிவதத்வமுதலிய த த்வத்ரயங்களை அந்தந்த அதிபர்களோடு பூஜித்து பட்டுக்கயற்றி ல் வாஸுகியையும் (௧௧௬) கருப்புப்பஞ்சில் சூர்யனையும் பூஜித்து ஆதிசைவப்பிராம்மணர் அல்லது மஹாசைவபிராம்மணர் அதாவ து சிவதீக்ஷைபெற்ற பிராம்மணர் இவர்கள் பட்டுக்கயற்றைசுற்றி இழுத்தல்வேண்டும் அதாவது தயிர் கடைவதுபோல் கடைதல் (௧௧௭) இதற்கன்யமானவர்கள் கடைதல்கூடாது கடைவானாகில் கர்த்தாநாசத்தை அடைவார் கடையுங்காலத்தில் கருப்புப்பஞ் சை வைத்து கடைதல் வேண்டும் இவ்வாறுள்ள அக்னியைக் கிர ஹிக்க (௧௧௮) இன்னமுஞ்சறிப்படாவிடில் ஆதிசைவபிராம்மணர் வீட்டிலுள்ள அக்னியாவது கிரஹித்தல் வேண்டும்இந்த அக்னி யை தாம்பிரபாத்திரத்திலாவது சராவத்திலாவது எடுத்து(௧௧௯) குண்டத்திற்கு ஆக்னேய திக்கிலாவது ஈசானநிருதிதிக்கிலாவது வைத்துவைக்கப்பட்ட அக்னியில் கொஞ்சமக்னியை அஸ்திராய நம: என (௧௨0) நிருதிதிக்கில்போட்டு அக்னிக்குநிரீக்ஷணப்ரோ க்ஷணதாடனப்யுக்ஷணாதி நான்கு ஸம்ஸ்காரங்கள்செய்து (௧௨௧) ஓம் ஹாம் ஹம் ஹாம்வன்ஹி மூர்த்தயே நம: எனப்பூஜித்து (௧௨௨) பிந்துஸ்தானத்தினின்று பராசக்திகலக்கத்தாலுண்டான அந்தஸ்வரூபமாயும் நிர்மலமாயும் கோடி சூர்யப்பிரகாசமாய்ப்பிர காசிப்பதாய் பாவிக்க இவ்வாறு தியானித்து (௧௨௩) பூதாக்னி யை நக்ஷத்ராகாரமாய் (௧௨௪) பாவித்து ஸம்ஹாரமுத்திரையால் பூரகத்தால் கிரஹித்து பூதாக்னி நாபிதேசத்திலுள்ளதும் நாப்ய க்னி ஹிருதயத்திலுள்ளதும் (௧௨௫) பிந்து அக்னிபுனுவநடுவிலு

ள்ளதுமாகும் இவற்றுள் பூதாக்னி நூறு சூர்யபிரகாசமுடையது
ம் (௧௨௬) நாபி அக்னி ஆயிரஞ் சூர்யப்பிரகாசமுடையதும் பதி
னாயிரஞ்சூர்யபிரகாசமுடையது பிந்து அக்னியுமாகும் (௧௨௭)
பூதாக்னியை நாபியிலும் சுஷும்னாமார்க்கத்தால் நாபயக்
னியைக்கிரஹித்து (௧௨௮) பிந்துஅக்னியில்யோஜித்துஅதினதி
ற்குற்ற சூர்யபிரகாசங்களைப்பாவிக்க திரும்பரேசகத்தால் வெளி
யேகொணர்ந்து (௧௨௯) ஓம்ஹாம்வன்ஹி சைதன்யாயநம:எனபூ
ஜித்து சித்சக்தியேசேதனரூபமாகவும் இவற்றால்சைதன்யஸ்வரூ
பமாய்பாவித்து (௧௩௦) இதுஎல்லாசக்திகளோடுகூடியதாயும் எ
ல்லாகார்யங்களையும் முடிக்கத்தக்கதாயும் உருவமற்றதாயும் அ
சைவற்றதாயுமுள்ள அக்னிசைதன்யஸ்வரூபத்தை (௧௩௧) தியா
னித்துவெளியிலுள்ள அக்னிபாத்திரத்தினக்னியில் வைத்தல்வே
ண்டும். ஸம்ஹிதாமந்திரத்தால் விதிவத்தாய்அக்னியை பூஜித்தல்
வேண்டும்.(௧௩௨) ஸம்ஹிதாமந்திரம்இரண்டுபிரகாரமாகும்அஃது
பதினொருமந்திரமெனவும் பதினைந்துமந்திரமெனவு மிரண்டுபிர
காரமாம் (௧௩௩) சிவாஸனமூர்த்திமூலம் ஈசானதிபிரும்மப
ஞ்சகம் வித்யாதேஹம்நேத்திரம்திருப்பமூலம் ஷடங்கமந்திரங்க
ள் இவைகள் பதினைந்துமந்திரங்களாம் இனிபதினொருமந்திரத்
தைக்கேட்பாயாக (௧௩௪) ஈசானம் முதல் ஸத்யோஜாதம்வரை
யிலும் நேத்திரம்ஷடங்கமந்திரங்கள்இவைகள்பதினொருமந்திரத்
தோடுகூடிய ஸம்ஹிதாமந்திரங்களாகும் (௧௩௫) கர்ஷணம்முதல்
பிரதிஷ்டைவரையிலும் பிரதிஷ்டை முதல்உத்ஸவம் வரையிலும்
உத்ஸவம்முதல்பிராயச்சித்தம்வரையிலும் (௧௩௬) பதினைந்தஸங்
கியைகளையுடைய ஸம்ஹிதாமந்திரத்தாலும் தீக்ஷைமுதலிய அன்
யகார்யங்களில் பதினொரு ஸங்கியைகளையுடைய
ஸம்ஹிதாமந்திரத்தால் செய்தல் வேண்டும் (௧௩௭)
இதில் கூறியவாறு ஸம்ஹிதாமந்திரத்தால் அக்னியைபூஜித்து ந
ன்றாய் ரக்ஷித்து அவகுண்டனஞ்செய்து தேனுமுத்திரைகாட்டி
(௧௩௮) குண்டத்திற்குமேல் மும்முறை குண்டத்தை பிரதக்ஷிண
க்ரமமாய்ச்சுற்றி இந்த அக்னியை சிவபீஜமாகப்பாவித்து (௧௩௯
இந்த சிவபீஜம் ஸர்வசக்தியுடையதாய் ஸர்வஞ்யத்வாதி குணங்க
ளோடு கூடியதாய் எல்லா கார்யங்களையும் நியாமகஞ்செய்வதாய்
அறுகுணங்கள் நிறையப்பெற்றுள்ளதாய் (௧௪௦) தியானித்து ஈசா

ஷூக்கிரமாய் வைக்கப்பட்ட பிதர்ஸ்வரூபமான வாகீசுவரி விஷ்டா த்தை சிரஸேநம: எனப்பூஜித்துதியானித்து (௧௪௧) வாகீசுவரீவி ஷ்டாத்தை தெற்குமேகலையின்மேல்வைத்து வாகீசுவரியின்கர்ப் பநாடியின்வழியாய் வாகீசுவரரால்சிவபீஜத்தைவைக்கப்பட்டதா ய் தியானித்து (௧௪௨) ஹிருதயமந்திரத்தால்குண்டஹிருதயத்தி ல்பூஜித்து(௧௪௩) பூமியில்முழந்தாளையூன்றி தனக்குநேராககுண் டத்தின்ஹிருதயத்தில் யோநியிருக்கும்வழியாய் குண்டத்தில் அ க்னியைவைத்தல்வேண்டும் (௧௪௪) அகோரஹிருதயாயநம; என அக்னியைஸ்தாபித்தல்வேண்டும் தனக்கெதிர்முகமாய்அக்னியை ஸ்தாபித்தல்வேண்டும் தர்ப்பதோஸமித்துக்களை (௧௪௫) அக்னி யில்வைத்து கர்ப்பந்தரித்ததாய் கர்ப்பாதானத்தைப்பாவித்து ஹி ருதயாயநம:என (௧௪௬) ஸமித்துக்கள்குண்டஹிருதயம் முதல் நாபிவரைபரவச்செய்து (௧௪௭) திரும்பமும்முறைசெளசசமன ங்கொடுத்து கவசமந்திரத்தால்ஸமித்தைவைத்து (௧௪௮) அக்னி யைஜ்வலிப்பித்து அந்தஜ்வாலாமுகத்தில் அஸ்திராயநம:எனப்பூ ஜித்து (௧௪௯) ஓம்ஹாம்கர்ப்பாக்னயேநம:எனஅக்னியைப்பூஜித் துகர்ப்பாக்னிசந்திரவர்ணம் அக்னிஜ்வாலாகேசமுடையது (௧௫0 கால்முதல்தலைவரை அவயவங்கள்உண்டானதாய்தியானித்து கர் பாக்ஷையின் பொருட்டு தேவியின் கரத்தில் (௧௫௧) தர்ப்பையால் செய்தகங்கணத்தை அஸ்திரமந்திரத்தால்கட்டி கர்ப்பாக்ஷார்த்த ஞ்சிவாஸ்திரத்தை ஸர்வஞ்யத்வாதி குணங்களோடு கூடியதாய் ௧௫௨) ஸெளம்யமாயும் பிரஸன்னமான முகமுடையதாயும் எல்லா கார்யங்களுக்கும் நியந்திராவாயும் தியானித்துஸத்யோஜாத மந் திரத்தால் (௧௫௩) தியானத்தோடுபூஜித்து ஓம்ஹாம்ஹிருதயாய ஸ்வாஹாவென எள்ளுநால் மூன்றுகுதிசெய்து (௧௫௪) தர்ப்பைநு ணியால்ஜலத்தை கிரஹித்து ஹிருதயாயஸ்வாகா எனஅக்னியில் ஜலபிந்துவைவிட்டு மூன்றும்மாதம் பும்ஸவனத்தின்பொருட்டு (௧௫௫) வாமதேவமந்திரத்தால் தியானத்தோடுபூஜித்து சிரஸே ஸ்வாஹாஎனஎள்ளினால்மூன்றுஹோமஞ்செய்து (௧௫௬) சிரஸேஸ் வாஹாஎன தர்ப்பைநுணியால் ஜலபிந்துவைவிட்டு விட்டுஆறுவ துமாதம் ஸீமந்தோன்னயனத்தின்பொருட்டு (௧௫௭) அகோரமந் திரத்தால் தியானத்தோடுபூஜித்து ஓம்சிகாயைஸ்வாஹாவேனஎ ள்ளினால்மூன்றுகுதிசெய்து(௧௫௮)சிகாயைஸ்வாஹாவென தர்பை

நுணியால் ஜலபிந்துவைவிட்டு சிகைமுதலான அங்கதர்ப்பணஞ் செய்து (கருகூ) ஒன்பதாமதம்சித்ஸ்வரூபமுண்டாதற்பொருட்டு தத்புருஷமந்திரத்தால் தியானத்தோடுபூஜித்து (கசு0) கவச்சாய ஸ்வாஹாவென மூன்றுஹூதி என்றுஞல்ச்செய்து ஜலபிந்துவை தர்ப்பை நுணியால் கவச்சாயஸ்வாஹாவெனவிட்டு (கசுக) பத்தாம்மாதம் பிரத்தலின் பொருட்டு ஈசானமந்திரத்தால் தியானத்தோடு பூஜித்து (கசுஉ) அஸ்திராயஸ்வாஹாவென மூன்றுஹூதி என்றுஞல் செய்து தர்ப்பைநுணிஜலபிந்துவை அஸ்திராய ஸ்வாஹாவென அக்னியில் விட்டு (கசுங) ஜனனமானபின் கர்ப்பமலங்கள் நீங்க அக்னியைதர்ப்பை முதலியவற்றால் ஜ்வலிப்பித்து சிவமந்திர முச்சரித்து அர்க்யஜலத்தால் தர்ப்பைநுணியால் புரோக்ஷித்து (கசுச) தேவியின்கையிலுள்ள தர்ப்பகங்கணத்தை விஸர்ச்சனஞ்செய்து அதாவது நீக்குதல் தேவிகையில் தங்ககங்கணம் (கசுரு) ஹிருதயத்தால் கட்டுதல் வேண்டும் தர்ப்பை நுணியால் மேல் மேகலையில் அஸ்திரமந்திரத்தால் தட்டி (கசுசு) கவசமந்திரத்தால் குண்டத்திற்குவெளியேவிசேஷார்க்யஜலத்தால்(கசுஎ) குண்டத்தை பிரதக்ஷிணமாய்ச்சுற்றுவது சூதக நிவிருத்தி என்பதாம் பாலாக்னியை பாவிக்கபாலாக்னியை ஆஸனமூர்த்தி மூலத்தால் பூஜித்து (கசுஅ) மூன்றுகண்களோடுகூடிய இரண்டுதலை ஏழுநாக்குமூன்றுகால் ஸிருவம் மணிவலயம் ஸிருக்கு இவைகள் வலக்கைகளிலும் சக்திஸிரி தோமரம் நெய்ப்பாத்திரம் இவைகள் இடக்கைகளிலும் தரித்துள்ளதாய் அருணவர்ணமுடையதாய்பாலாக்னியை தியானித்து (கசுகூ) இந்தபாலாக்னி மேற்குமுகமாயிருப்பதாய்பாவிக்க புஷ்பத்தையும் விசேஷார்க்ய ஜலத்தையுங்கிரஹித்து (கஎ0) ஈசானமந்திரத்தால் புரோக்ஷித்து திரும்ப புஷ்பார்க்யஜலங்கிரஹித்து குண்டத்தைபிரதக்ஷணக்கிரமமாய் ஜலத்தையும் புஷ்பத்தையும்விடுக. (கஎக) இதற்கு ஒத்தாசையின்பொருட்டு தர்ப்பைஸமித்துக்களால் அக்னியில் வைக்க இனி அக்னிக்குஆவரணகர்ப்பிதத்தின் பொருட்டு (கஎஉ)விஷ்டரம் பரிதி கூர்ச்சம்பரிஸ்தரணம் இவைகளைபோடுக இவற்றுள் சிவாக்னிசிவாகாரமாயிருத்தலின் இதுமுதலாவரணமும் (கஎங) விஷ்டத்தைச்சுற்றிலும் அஷ்டவித்யேசுவரஸ்தானமாயிருத்தலின் இது இரண்டாமாவரணமும் பரிதிகள் (கஎச) நந்திமுதல் சண்டபர்யந்தஸ்தானமாயிருத்தலின் இது மூன்றுமாவரணமும் கூர்ச்சத்தைச் சுற்றிலும் இந்திரன் முதல் ஈசானம்வரையிலும் (கஎரு) பிரும்ம விஷ்ணுபர்யந்

தமுமாகவிருத்தலால் இதுநான்காமாவரணமும் பரிஸ்தரணங்கள் வஜ்ராதிசக்கிரபர்யந்தஸ்தானமாயிருத்தலால் (௧௭௬) இது ஐந்தாமாவரணமுமாகும் இவ்வாறு அக்னிக்கு ஆவரணத்திற்பொருட்டு இவைகள்குண்டத்தைச் சுற்றிலும் போடவேண்டும். விஷ்டரமுதல் பரிஸ்தரணமீறுதியாக (௧௭௭) மேன்மேகலையில் நான்கு பக்கங்களிலும் விஷ்டரம் நான்கும் நடுமேகலையில் பரிதிநான்கும் கீழ்மேகலையில் நான்குகூர்ச்சங்களையும்(௧௭௮) கீழ்மேகலைக்குகீழ் பரிஸ்தரணம் நான்கும்போடுதல்வேண்டும்விஷ்டரம்முதல்பரிஸ்தரணம் வரை (௧௭௯) இந்தக்கிரமமாய் வைதிகாக்னிக்குச் செய்தல் கூடாது செய்தால் தோஷமாகும் ஆவரணமல்லாமலே வைதிகாக்னியை உபாஸிக்கவேண்டும் (௧௮௦) வைதிகம் என்பது இரண்டு பிரகாரமாகும் இஃது பராபரமென இருகூறுகும் அபரமானமான் யதர்மரூபமும் பரம்முக்தியெனவுஞ் சொல்லப்படும் (௧௮௧) தர்மம் ஸாமன்யம்விசேஷமெனரெண்டாம் அபரம் ஸாமான்யதர்மமும் பரதர்ம்மம் விசேஷமெனவுங்கூறப்படும் (௧௮௨) அபரத்தை நோக்கபரம்மேலானதும்பரத்திற்குமேல்தர்மமேயில்லை எனவும் இதிலைவைதிகாக்னியைநோக்கசைவாக்நிவிசேஷமெனவுங் கூறப்படும்(௧௮௩)மூன்று பரிஷத்துவஸமித்தோடுங்கூடிய அக்னியாதொன்றுண்டோ இதுவைதிகாக்னியும் மிச்ராக்னிஇரண்டுங் கூடியதெனவும் (௧௮௪) நான்குபரிதிகளோடு கூடியது சிவாக்னி என சிவாகமமாகியசைவசாஸ்திரத்தில்கூறியிருக்கின்றது. பிரணீதை பிரும்மகூர்ச்சங்களோடு கூடியதுவைதிகாக்னியாகும்(௧௮௫) வைதிகாக்னிக்கு பிரும்மா அதிஷ்டானமாகும் சிவாக்னிக்கு சிவமே நேரே அதிஷ்டானமாதலின் (௧௮௬) பிரணீதைபிரும்மகூர்ச்சம் முதலியவைகள் சிவாக்னியிலில்லை யாகேசுவரன் யாகேசுவரீ இவர்களை சிவரூபமாய் ஸ்தாபிக்கப்டுவதால் சிவமே அதிஷ்டானமாவார் ஆஸ்தானமே அதிஷ்டானமென்பது கருத்து (௧௮௭) சிவாக்னிக்கு சிவமே அதிஷ்டான ரூபமாய்பாவிக்கப்படவேண்டும். சிவபெருமானுக்கு அன்யமானதேவர்களை சிவாக்னியில்பாவித்தல் கூடாது பாவிப்பாருகில்ராஜ்பன்னசத்தைஅடையும் (௧௮௮) இதிலைவைதிகாக்னியைஆவரணபூஜைபன்றியிலும் சிவாக்னியைபஞ்சாவரணங்களோடும் உபாஸித்தல்வேண்டும் (௧௮௯) இதிலைவிஷ்டரம்முதல் பரிஸ்தரணம்வரை சிவாக்னிக்குபோடுதல்வேண்டும் (௧௯௦)கிழக்குநுணியாகவும்வடக்குநுணியாகவும்விஷ்டரம்முதல்ப

ரிஸ்தரணமிருதியாகப்போடுதல்வேண்டும்(௧௯௧)இனிவிஷ்டரலக்ஷ
ணத்தைக்கேட்பாயாக நுனியுள்ள தர்ப்பைகள் ஒருமுழநீளம்நறு
க்கி அல்லது குண்டமேகலையினளவாகவாவதுநறுக்கி(௧௯௨)முப்
பத்திரண்டுதர்ப்பங்கள் உத்தமம் இருபத்தைந்து மத்யமம் பதி
னைந்து தர்ப்பை அதமம் ஒன்பது அதமாதமமாகும் (௧௯௩) இவ்
வாறு சொல்லப்பட்ட நுனியோடுகூடிய தர்ப்பங்களை எடுத்து பதி
னறு அங்குலத்திற்குமேல் இரண்டங்குலத்தில்முடிச்சிட்டு(௧௯௪)
நுனியுள்ள மீந்த ஆரங்குலத்தை முடிச்சு நுனியில்வைத்து ஒ
ருதர்ப்பையால் முடிச்சிற்குக்கீழ் (௧௯௫) அடிவரை சுற்றி முடி
வது விஷ்டரமென்பதாம் பரிதி எந்தவிதத்து ஹோமஞ்செய்யப்
படுகிறதோ இதிலேதானுமொன்றுபரிதிக்குக்கிரஹித்தல்வேண்டும்
(௧௯௬) இதின்சுற்றளவு கட்டைவிரல்பிரமாணமும் நீளம்ஒரு மு
ழம் அல்லது குண்டமேகலையின் அளவினதாகும்(௧௯௭) இனிகூர்
ச்சலக்ஷணங்கூறுகிறேன் கேட்பாயாக இவை அந்தக்கூர்ச்சம்லம
ப கூர்ச்சமென இருவகைத்தாம் (௧௯௮) அந்தக்கூர்ச்சம் கும்ப
த்திலுள் போடுவதும்குண்டத்தில்போடுவதுமாய்இரண்டாம்கூர்ச்
சமின்றிச்செய்யுங்கர்ம்மாக்கள்பயனற்றதாகும்(௧௯௯)முப்பது தர்
ப்பை உத்தமம் இதில்பாதி மத்யமம் ஏழுதர்ப்பங்கள் அதமம்இந்த
ஸங்கியையோடு கூடி தர்ப்பங்களைக்கிரஹித்து (௨௦௦) ஒரு முழம்
அல்லது குண்டத்தினளவினதாய்நறுக்கி இரண்டங்குலத்தில்முடி
ச்சிட்டுநுனிதர்ப்பை மூன்றங்குலம் விட்டு (௨௦௧) முடிச்சுபிரதக்ஷி
ணமாகவும் முடிதல் வேண்டும். அப்பிரதக்ஷிணமாகச்சுற்றுதல் கூ
டாது கூர்ச்சம்பவித்திரமிரண்டும் பிரதக்ஷிணமாகமுடிதல் வேண்
டும்(௨௦௨)இவ்வாறுமுடிதல்சுபத்தைத்தரும் அப்பிரதக்ஷிணமாக
முடிதல் தீங்கையுண்டாக்கும் முடிச்சிற்குக்கீழ் அடிவரை ஒருதர்
ப்பையால் (௨௦௩) சுற்றிமுடிதல் கூர்ச்சலக்ஷணமென்பதாம இனி
பரிஸ்தரணத்தைக்கேட்பாயாக (௨௦௪) பரிஸ்தரணத்திற்கு இருப
து தர்ப்பை உத்தமம் இதிர்பாதிமத்யமம் இதிற்பாதி அதமமு
மாகும் (௨௦௫) நீளம் ஒருமுழமாவது குண்டஅளவாவது இருக்
கலாம். கிழக்கு நுனியாகவும் வடக்குநுனியாகவும்போடுதல்வே
ண்டும் (௨௦௬) கூர்ச்சத்திற்கு கூறியவாறு எண்ணிக்கையோடு
கூடியதர்ப்பங்களை நுனியில் முடிச்சுமாத்திரம் போடுவது லம்ப
கூர்ச்சமென்பதாம் இது கும்பத்திற்குமேல் போடுதல்வேண்டும்.
(௨௦௭) பவித்திரம் அநாமிகைவிரலில் தரித்து எல்லாகார்யங்களை

சுத்தமாய் சிவபெருமானிடத்துள்ளதாய் பாவித்து அவாஹித்து தன் சரீரத்தின் (உ௩௯) இடபாகத்தில் பிரும்மனே நமஃ, எனப் பூஜித்து பிரும்மமயமாய் தியானித்து (உ௪0) ஆஜ்யஸ்தாலியை எடுத்து குண்டத்தைச் சுற்றி அக்னிமூலையில் அக் னியில் காட்டி (உ௪௧) அக்னிதிக்கில் வைத்து தர்ப்பநுனியால் நெய்யைக்கிரஹித்து பிரும்மஜஞானமந்திரத்தால் ஸ்தோத்திரஞ் செய்து பிரும்மணேஸ்வாஹா வென ஹோமஞ்செய்வது (உ௪உ) தா பனஸம்ஸ்காரம் எனப்படும். இனி அதிசிரயணஸம்ஸ்காரத்தைக் கேட்பாயாக தனது நாபிதேசத்தில் ஓம் ஹாம் விஷ்ணவே நமஃ எனப் பூஜித்து (உ௪௩) விஷ்ணுமயமாய் தியானித்து நெய்பாத்தி ரத்தை ஈசானகோணத்தில்வைத்து தர்ப்பைநுனியால் நெய் திவ லையைக் கிரஹித்து(உ௪௪) இதம் விஷ்ணுர்விச்சக்ரமே என்னும் வேதரிக்கால் ஸ்தோத்திரஞ்செய்து ஓம் ஹாம் விஷ்ணவேஸ்வா ஹா வென ஹோமஞ்செய்வது அதிசிரயண ஸம்ஸ்காரமென்பதா ம் (உ௪௫) பிரும்மாவிஷ்ணுவில் லயமானதாய்ப்பாவிக்க திரும்பத் தனது ஹிருதயத்தில் ஓம் ஹாம் ருத்திராய நமஃ எனப் பூஜித்து நெய்ப்பாத்திரத்தை (உ௪௬) நாபிவரை தூக்கி குண்டநாபியில் வைத்து தர்ப்பைநுனியால் நெய்த்துளி கிரஹித்து யோருத்ரோ அக்நௌவென்னும் வேதமந்திரத்தால் ஸ்தோத்திரஞ்செய்து ருத் ராயஸ்வாஹா வென ஹோமஞ்செய்க (உ௪௭) விஷ்ணுவை ருத்ர பீடத்தில் லயஞ்செய்க இவை பசுபாவத்தைப் போக்கி பதிஸ்வரூ பமான ருத்ரபாவத்தை அடைவது உத்வாஸன ஸம்ஸ்காரமென்ப தாம் (உ௪௮) வாஸ்துசாந்தி முதல் ரக்ஷாபந்தனம்வரை செய்யப் படும் அக்னிகார்யத்திற்கு அதிசிரயண ஸம்ஸ்காரம்வரை செய்ய த்தக்கது (உ௪௯) உத்வாஸன ஸம்ஸ்காரஞ் செய்தல்கூடாது செ ய்வாராகில் கர்த்தாநாசமடைவர். இந்த நெய்பாத்திர இடைவெ ளிக்குத்தக்கபடி இரண்டுதர்ப்பை எடுத்து இந்த இரண்டிற்குநடு வே நுனியில் முடிந்து (உ௫0) இந்த பவித்திரத்தை கட்டைவிர லாலும் அநாமிகைவிரலாலுங் கிரஹித்து அஸ்திராய நமஃ என (உ௫௧) நெய்யில்போட்டு அக்னிக்குந் தனக்குமாய் அபிமுகமாக மூன்றுதடவை போகவர அசைத்து தனக்கெதிர்முகமாக வைத்து க்கொள்வது(உ௫உ) ஸப்லவனஸம்ஸ்காரமென்பதாம் பின் அகோ ரேப்யோ தகோரேப்யோ என்னும் வேதமந்திரத்தால் ஸ்தோத் திரஞ்செய்து ஓம் ஹாம் அகோரஹிருதயாய நமஃ என (உ௫௩)

பூஜித்து பன்னிரண்டுதடவை அபிமந்திரித்து இரண்டு நுனிதர்ப்பையை கொளுத்தியாக்னிகரணத்தின்பொருட்டுகாட்டி (௨௫௪) நிருதிதிக்கில் கொளுத்திய தர்ப்பையைவைத்து இரண்டு தர்ப்பை நுனியைக்கிள்ளி நெய்யில்போட்டு தீபனத்தின்பொருட்டு (௨௫௫) திரும்ப இரண்டுதர்ப்பைகொளுத்தி நெய்யைச்சுற்றி அஸ்திரமந்திரத்தால் ஜலத்தைத்தொட்டு கொளுத்திய தர்ப்பையை அக்னியில்வைத்து விடுதல்வேண்டும் (௨௫௬) இது தீபனஸம்ஸ்காரமென்பதாம் நெய்யில்போட்டிருக்கும் பவித்திரத்தின் முடிச்சை அவிழ்த்து அக்னியில் வைத்துவிடுதல்வேண்டும் (௨௫௭) முன் ஹிருதயத்தால் பூஜிக்கப்பட்டு கொளுத்தி நிருதிதிக்கில் வைக்கப்பட்ட பொசிங்கிய தர்ப்பயை அஸ்திரமந்திரத்தால் கிரஹித்து நெய்யில்த்தோய்ப்பது ஆஜ்யஸம்ஸ்காரமென்பதாம் (௨௫௮) முன்போல் இரண்டுதர்ப்பயால் பவித்திரஞ்செய்து கிழக்குநுனியாய் நெய்யில்பொட்டு (௨௫௯) இதை தெற்குவடக்கில் விரித்துப்போட்டு தெற்குவடக்கு நடுபாகமாய் மூன்றாய்ப்பிரித்து சுக்லபக்ஷ கிருஷ்ணபக்ஷபக்ஷாதீதமாய்பாவித்து (௨௬௦) இடாபிங்களாஸுஷும்ஞு என்னும் மூன்று நாடிகளாய் பாவித்து தெற்குபாகத்தில் பிங்களாநடயே நம: எனப் பூஜித்து (௨௬௧) பிங்களை தங்கநிறமாய் இச்சாசக்திஸ்வரூபமாய் ஆயிரங்கோடி சூரியப்பிரகாசமுடையதாய் மனோஞ்யமாய் (௨௬௨) ஹோமத்தின்பொருட்டு நெய்யை சோஷித்ததாய் தியானித்து இடதுபாகத்தில் (௨௬௩) ஓம் ஹாம் இடாநாடயே நம: எனப் பூஜித்து இடை ஸ்படிகநிறம் கிரியாசக்திஸ்வரூபம் (௨௬௪) கோடிசந்திரப்பிரகாசம் இவ்வாறு நெய் திரும்ப ஸிருவித்ததாய் தியானித்து நடுபாகத்தில் ஓம் ஹாம் ஸுஷும்ஞுநாடயே நம: எனப் பூஜித்து (௨௬௫) சுஷும்னை ஜ்யோதிரூபம் ஞ்யானசக்திஸ்வரூபம் நெய்யை அமிருதமயமாய் பாவித்து எல்லாகார்யங்களுக்கும் அனுகூலமாய் தியானிக்க (௨௬௬) இந்த அக்னியில் எதிரிபாகத்தின் கீழ்ப்பிரதேசத்தில் வலமிட நடுநேத்திரங்களை நமோந்தமாய் பூஜிக்க (௨௬௭) தெற்கில் தக்ஷிணநேத்திராய நம: எனப் பூஜித்து சிவாக்னியில் வலதுநேத்திரம் ஆயிரஞ்சூர்ய பிரகாசமுடையதாயும் (௨௬௮) சுக்லபக்ஷத்தோடு கூடியதாய் ஸௌம்யமாய் இச்சாசக்திஸ்வரூபமாய் தியானித்து ஆவாஹித்து வாமபாகத்தில் (௨௬௯) ஓம் ஹாம் வாமநேத்ராயநம: எனப்

பூஜித்து கோடிசந்திர பிரகாசமாய் கிரியாசக்தி ஸ்வரூபமாய் (௨௭0) சிவாக்னியின் வாமநேத்திரம் கிருஷ்ணபக்ஷத்தோடுகூடியதாய் தியானித்து நடுவில் ஓம் ஹாம் மத்யநேத்ராய நம: எனப் பூஜித்து (௨௭௧) மத்யநேத்திரம் ஜ்யோதிஸ்வரூபமாய் ஜ்வாலையே கேசமாகவுடையதாய் ஞானசக்திஸ்வரூபமாய் எல்லாத்திற்கு மதிதமாய் (௨௭௨) தியானித்து சுக்லபக்ஷமாகில் ஸ்ருவத்தில் நெய்யை எடுத்து அக்னயேஸ்வாஹா வென வலதுபாகத்திலுள்ள நெய்யால் வலதுநேத்திரத்தில் ஹோமஞ்செய்க (௨௭௩) நெய்யின் இடதுபாகத்தில் ஸ்ருவத்தால் கிரஹித்து ஸோமாயஸ்வாஹாவென (௨௭௪) இடதுநேத்திரத்தில் ஹோமஞ்செய்தல்வேண்டும் நடுபாகத்திலுள்ள நெய்யை ஸ்ருவத்தாலெடுத்து அக்னிஸோமாப்யாஸ்வாஹா வென (௨௭௫) மத்யநேத்ரத்தில் ஹோமஞ்செய்க நேத்திரத்திற்குமேல முகத்தை பிரதிட்டாபனஞ்செய்க (௨௭௬) ஓம் ஹாம் வக்திராய நம: எனப் பூஜித்து வக்திரம் குங்குமநிரம் ஸ்படிகநிரம் சங்கநிரம் (௨௭௭) புகைநிரம் வண்டின்னிரம் இவைகளோடு ஸர்வசக்தியுடையதாய் தாயும்ஸௌம்யமானமுகமுமுடையதாய் தியானித்து அக்னயேஸ்விஷ்டகிருதேஸ்வாஹா வென (௨௭௮) அக்னிவக்திரத்தில் ஹோமஞ்செய்து மீந்துள்ள நெய்யை அந்தந்தபாகத்தில் வைத்தல்வேண்டும் (௨௭௮) இந்தப்பிரகாரம் சுக்லபக்ஷத்தில் ஹோமஞ்செய்தல்வேண்[illegible] கிருஷ்ணபக்ஷமாயிருப்பின் ஸோமாயஸ்வாஹா வென (௨௭௯) அக்னியில் வாமநேத்திரத்திலும் அக்னயேஸ்வாஹா வென வலதுநேத்திரத்திலும் (௨௮0) அக்னிஸோமாப்யாம்ஸ்வாஹாவென நடுநேத்திரத்திலும் அக்னயேஸ்விஷ்டகிருதேஸ்வாஹாவென அக்னியின்முகத்திலும் ஹோமஞ்செய்க (௨௮௧) அந்தந்த பக்ஷத்தில் அந்தந்த ஹோமத்தைச்செய்க இதற்கு வேறாகச் செய்வாராகில் ராஜ்யம் பஞ்சத்தால் பீடிக்கப்படும்(௨௮௨) இதற்குமேல்நெய்யை ஸம்ஹிதாமந்திரத்தால்அபிமந்திரிக்க இதின்மேல்வக்திரவிதானத்தைக் கேட்பாயாக (௨௮௩) நெய்பாத்திரத்தில் மேற்குபக்கத்திலுள்ள நெய்யை ஸ்ருவத்தால் கிரஹித்து ஸத்யோஜாதம் பிரபத்யாமி என்னும் வேதரிக்கால் ஸ்தோத்திரஞ்செய்து ஸத்யோஜாதாயஸ்வாஹா வென (௨௮௪) மேற்குமுகத்தில் ஹோமஞ்செய்க வாமதேவாயநமோ வென்னும் வேதரிக்கால் ஸ்தோத்திரஞ்செய்து வாமதேவாயஸ்

வாஹாவென (உ௮௫) இடது பாகத்திலுள்ள நெய்யால் இடது முகத்தில் ஹோமஞ்செய்க அகோரேப்யோதகோரேப்யோ என்னும் வேதரிக்கால் ஸ்தோத்திரஞ்செய்து அகோராயஸ்வாஹா என (உ௮௬) தென்புரத்துள்ள நெய்யால் அக்னியின் தெற்கு முகத்தில் ஹோமஞ்செய்க தத்புருஷாயவித்மஹே என்னும் ரிக்கால் ஸ்தோத்திரஞ்செய்து தத்புருஷாயஸ்வாஹாவென (உ௮௭) கீழ் பாகத்திலுள்ள நெய்யால் கிழக்குமுகத்தில்ஹோமஞ்செய்க ஈசானஸர்வவித்யாநாமென்னும் ரிக்கால் ஸ்தோத்திரஞ்செய்து ஈசானாயஸ்வாஹாவென (உ௮௮) நடுவிலுள்ள நெய்யால் நடுமுகத்தில் ஹோமஞ்செய்க (உ௮௯) இவ்வாறு செய்வது வக்திரீகரணஸம்ஸ்காரமென்பதாம் இனிவக்திரானுஸந்தானஸம்ஸ்காரத்தைக் கேட்பாயாக ஸத்யோஜாதவாமதேவாப்யாம்ஸ்வாஹாவென மேற்கு முதல் வடக்குதிக்குவரை ஹோமஞ்செய்க (உ௯0) வாமதேவஅகோராப்யாம்ஸ்வாஹாவென வடக்கு முதல் தெற்குதிக்குவரையிலும் அகோரதத்புருஷாப்யாம் ஸ்வாஹாவென தெற்குமுதல்கிழக்குவரையிலும் (உ௯௧) தத்புருஷஈசானாப்யாம் ஸ்வாஹாவென கிழக்குமுதல் நடுவரையிலும் ஹோமஞ்செய்வது வக்திரானுஸந்தானமென்பதாம்இனிவக்திரேகிகரணத்தைக்கேட்பாயாக(உ௯௨) ஓம்ஹாம்ஹீம்ஹூம்ஹைம்ஹௌம் ஸத்யோஜாதவாமதேவ அகோரதத்புருஷஈசானேப்யஸ்வாஹாவென (உ௯௩) ஹோமஞ்செய்வது வக்திரீககரணஸம்ஸ்காரமென்பதாம் இது அக்னி முகாந்தமெனக்கூறப்படும் இனி ஜிஹ்வா ஸந்தானத்தைக் கேட்பாயாக (உ௯௪) முதலில் ஜிஹ்வையைபிரதிஷ்டாபனஞ்செய்துபின்ஹோமஞ்செய்தல் வேண்டும் பிரதிஷ்டாஹீநமாய்ஹோமஞ்செய்தால் கர்த்தா போக்தாஇவ்விருவர்களும் நாசத்தை அடைவார்கள்(உ௯௫) வாஸ்துசாந்தி முதல் ரக்ஷாபந்தனம் வரை ஜிஹ்வா பிரதிஷ்டையன்றி ஜிஹ்வாஹோமமாத்திரஞ்செய்தால்தோஷமாகாது(உ௯௬) ஆக்னேயகோணத்தில் பஹுரூபஜிஹ்வாயநம: (உ௯௭) எனப்பூஜித்து பஹுரூபஜிஹ்வை அனேகவர்ணமாயும் அனேகரூபமாயும் அனேக ஞானத்தோடேகூடியதாயும் ஸௌம்யமாயும் அக்னிகோணத்தில்பாவிக்க (உ௯௮) இவ்வாறுதியானித்துஆவாஹித்து அக்னிக்கு ஈசானதிக்கில் அதிரக்தஜிஹ்வாயநம; எனப்பூஜித்து (உ௯௯) அதிரக்தஜிஹ்வை குங்குமநிரம் எல்லாமரியுஞ்சக்தியை

யுடையதாய் ஈசானகோணத்தில் பாவிக்க (௲00) இவ்வாறு தியா னித்து ஆவாஹித்து அக்னிக்குக்கிழக்கில் ஸுப்ரபாஜிஹ்வாயந மஃஎனப்பூஜித்து ஸுப்ரபைஸ்படிகநிறம் ஸ்வதந்திரமுடையதுஎங் ஙும் முகத்தோடுகூடியது (௲0௧) யாவற்றையும் பிரகாசப்படுத் துவதாய் கிழக்கில் பாவிக்க இவ்வாறுதியானித்து ஆவாஹித்து தெற்கில் கிருஷ்ண ஜிஹ்வாயநம: வெனப்பூஜித்து (௲0௨) கிருஷ் ணஜிஹ்வை நீலநிறம் குறைவிலாச்சக்தியுடையது (௲0௩) எல்லா பிரபஞ்சத்தைஉண்டுபண்ணக்கூடியதாய் தெற்கில் பாவிக்க இவ் வாறுதியானித்து ஆவாஹித்து அக்னிக்குவடக்கில் ரக்தஜிஹ்வா யநம: எனப்பூஜித்து )(௲0௪) ரக்தஜிஹ்வைவியாபகமுடையதும் செம்பரத்தம் பூநிறமுடையதும் எல்லாவற்றிலும்வியாபித்துள்ளது மாய் வடக்கில்பாவிக்க (௲0௫) இவ்வாறு தியானித்து ஆவாஹித் துமேற்கில் ஹிரண்யஜிஹ்வாயநம: எனப்பூஜித்து ஹிரண்யஜிஹ் வைதங்கநிறம் அணுதியானது (௲0௬) அடிநடுமுடிவில்லாதது இவ் வாறு மேற்குதிக்கில் தியானித்து ஆவாஹித்து நடுவில்கனகஜி ஹ்வாயநம: எனப்பூஜித்து (௲0௭) கநகஜிஹ்வை அருணநிறம்பி ரமேயமற்றது ஆமயமில்லாதது தனக்குச்சமானமில்லாதது எல் லாத்தையுஞ்செய்வதாய் நடுவில்பாவிக்க (௲0௮) இவ்வாறுதியா னித்து ஆவாஹித்து அக்னியில்ஹோமஞ்செய்க அக்னிகோணத் தில் பஹுரூபஜிஹ்வாயஸ்வாஹாவெனவும் (௲0௯) ஈசானதிக்கி ல் அதிரக்த ஜிஹ்வாயஸ்வாஹாவெனவும் கிழக்கில் ஸுப்ரபாஜி ஹ்வாயஸவாஹாவெனவும் (௲௧0) தெற்கில் கிருஷ்ணஜிஹ்வாயஸ் வாஹாவெனவும் வடக்கில் ரக்த ஜிஹ்வாய ஸ்வாஹாவெனவும் (௲௧௧) மேற்கில் ஹிரண்யஜிஹ்வாயஸ்வாஹாவெனவும் நடுவில் க னகஜிஹ்வாயஸ்வாஹாவெனவும் (௲௧௨) ஹோமஞ்செய்வது ஜி ஹ்வாஸந்தானமென்பதாம் இனி ஜிஹ்வா அனுஸந்தானத்தைக கேட்பாயாக பஹுரூபஅதிரக்தாப்யாம்ஸ்வாஹாஎனவும்(௲௧௩) அதிரக்தஸுப்ரபாப்யாம்ஸ்வாஹாஎனவும்ஸுப்ரபகிருஷ்ணப்யா ம்ஸ்வாஹாஎனவும்(௲௧௪)கிருஷ்ணரக்தாப்யாம் ஸ்வாஹாஎனவும் ரக்தஹிரண்யாப்யாம் ஸ்வாஹாஎனவும் (௲௧௫) ஹிரண்யகனகாப் யாம் ஸ்வாஹாஎனவும்ஹோமஞ்செய்வதுஜிஹ்வாநுஸந்தானமெ ன்பதாம்இனிஜிஹ்வியைகீகரணத்தைக்கேட்பாயாக(௲௧௬) பஹு ரூபதிரக்தஸுப்ரப கிருஷ்ணஹிரண்யகனகேப்யஸ்வாஹா வென

ஹோமஞ்செய்வது (௬௧௭) இஃதுவைக்ரனமென்பதாம் ஜாதகர்மத்தின் பொருட்டு ஸத்யோஜாதம் பிரபத்யாமிஎன்னும் வேதரிக்கால் ஸ்தோத்திரஞ்செய்க (௬௧௮) இந்தஸ்தோத்திரஞ் செய்யாவிடினுந்தோஷமில்லைஸத்யோஜாதமந்திரத்தால் ஏழாஹூதி செய்யினுல்ச்செய்க (௬௧௯) பொரியினுல் ஷிடிமந்திரத்தால் மூன்று ஹூதிசெய்க பெயரிடும் பொருட்டு வாமதேவாயநமோஎன்னும் வேதரிக்கால் ஸ்தோத்திரஞ்செய்து (௬௨0) வாமதேவாயஸ்வாஹாவென பன்னிரண்டாஹூதிநெய்யினுல் செய்துபொரி, தேன் நெய் இவைகளை ஒன்றுக்கிப்பிசைந்து இதினுலும் பன்னிரண்டாஹூதிசெய்க (௬௨௧) இதன்பின் ஓம் ஹாம் சிவாக்னி ஆஸனுயநம: எனவும் சிவாக்னிமூர்த்தயேநம: எனவும் சிவாக்னயேநம: எனவும் பூஜித்து சிவாக்னிஐந்துமுகம் ஏழுநாக்கு (௬௨௨) ஈசானமுகத்திலைந்து நாக்கு தத்புருஷம் முதலாகியதில் இரண்டு நாக்கு பத்து கைகள் மூன்றுகண்கள் எல்லாஆபரணங்களுமணிந்ததாய் (௬௨௩) ரக்தவஸ்திரம் ரக்தபுஷ்பம் பாதித்தாமரைப்பூவினுட்கார்ந்திருப்பதாய் மூன்றுமேகலாரூபமானபாதமுடையதாய் (௬௨௪) சூலம் வஜ்ரம்கத்திஸிருவம் சக்தி இவைகளை இடக்கைகளினுடையதாய் கதை தண்டம் பாசம் பத்மம் சக்கிரம் இவைகளை இடக்கைகளினுடையதாய்(௬௨௫) வலமிடப்புரங்களில் ஸ்வாஹா ஸ்வதாசக்திகளோடு கூடியதாய் எல்லாசக்தியுமுடையதாய் சிவாக்னியை பாவித்து சிவாக்னிஎன பெயரிடுதல் வேண்டும்இது நாமகரணமென்பதாம் (௬௨௬) சிவாக்னிபாலாக்னி எனவும் யௌவ்வனக்னிஎனவும்விர்த்தாக்னி எனவும் மூன்றுபேதங்களாகும் நாமாந்தமாய் செய்யப்படும் ஸம்ஸ்காராக்னிபாலாக்னியும் உபனயனம்வறைசெய்யப்படும் ஸம்ஸ்காராக்னியௌவனசிவாக்னிஎனம்*(௬௨௭)விவாஹம் வறை ஸம்ஸ்காரத்தால் செய்யப்படும் அக்னி விர்த்தாக்னி எனவுங்கூறப்படும் இந்த பேதங்களின் கிரமத்தால் ஒரே அக்னியானது அந்தந்தஸம்ஸ்காரபேதத்தால் (௬௨௮) பாலாக்னிஎனவும் யௌவ்வனக்னியெனவும் விர்த்தாக்னிஎனவும் அந்தந்தஸம்ஸ்காரகாலபேதத்தால் வேறுபட்டிருக்கும் மூன்றக்னிகளுக்கும் சிவாக்னிஎனபொதுவில் பெயருண்டு (௬௨௯) இந்த சிவாக்னியைச்சுற்றிலும் அங்ககல்பனத்தின்பொருட்டு ஆஹவனியாக்னிவிர்த்தாக்னிதக்ஷிணக்னியௌவனக்னி (௬௩0) கார்ஹபத்யாக்னிபாலஃ

க்னிஸாமான்யாக்னிகேவலாக்னிஎனஅங்கபாவமுடைய அக்னிகள்
எட்டு இந்தஅக்னிக்குமுன் சொன்ன சிவாக்னி அங்கிஎனக்கூறப்
படும் (௩௩௧) அன்னப்ராசனத்தின் பொருட்டு பால்விட்ட அன்ன
த்தை எடுத்து கொஞ்சம் நெய்விட்டுப்பிசைந்து அகோரேப்யோ
வென்னும்வேதரிக்கால்ஸ்தோத்திரஞ்செய்து அகோராயஸ்வாஹா
வென (௩௩௨) இருபதஞ்சாஹுதிதனித்தனிசெய்துபின் இந்தம
ந்திரத்தால் நெய்யினுலும் இருபத்தைந்து ஆகுதிசெய்து (௩௩௩)
ஸமாவர்த்தனஹோமத்தின்பொருட்டுஆச்சார்யரின் வலது பக்கத்
தில் நெல் அரிசிகளைப்பரத்தி இதற்குமேல் எட்டிதழ்கமலமெழு
தி (௩௩௪) இந்தபத்மத்தின்மேல் தங்கத்தாம்பாளம் வைத்துஇத
ற்குமேல்பட்டைவிரித்து (௩௩௫) இதின்மேல் தங்கம்அல்லதுவெ
ள்ளி பரித்திபஞ்சினுல் செய்த ஒருபூணூலைவைத்து (௩௩௬) வி
சேஷார்க்யஜலத்தால்புரோக்ஷித்துநிரீக்ஷணதிசுத்திகள் செய்து
சலாஸனம்பூஜித்து (௩௩௭) பூணூல் மூன்றுஸரங்களில் தத்வதிர
யங்களையும்தத்வாதிபர்களையும் பூஜித்து இச்சாஞானகிரியாசக்தி
களையும் பூஜித்து (௩௩௮) பிரும்மமுடிச்சில் சிவபெருமானைப் பூ
ஜித்து நைவேத்யதூபதீபார்கியஞ்செய்து ஸமாவர்த்தனஹோம
த்தின்பொருட்டு பொரிஸத்துமாஸமித்து (௩௩௯) ச்சரு இவைக
ளை கிரஹித்து தத்புருஷாயவித்மஹே என்னும் வேதரிக்கால் ஸ்
தோத்திரஞ்செய்து தத்புருஷாயஸ்வாஹா எனபதினைந்தாகுதிசெ
ய்து (௩௪0)பொரிமுதலாகியவற்றையும் தனித்தனி இந்தமந்திரத்
தால் பதினைந்தாகுதிசெய்து ஒம்ஹாம்யெளவ்வன சிவாக்னியேந
ம: எனப்பூஜித்து சிவாக்னியெளவ்வனுகாரமாகவும் ஐந்து சிரசு
(௩௪௧) ஈசானம் ஸ்படிகநிறமாகவும் புருஷம்வெண்மையாகவும் அ
கோரம்கருமையாகவும் வாமதேவம் குங்குமநிறமாகவும் (௩௪௨)
ஸத்யோஜாதம் பால்நிறமாகவும் மிகலக்ஷணமாய் பத்மாஸனத்தி
ன் மேலிருப்பதாய் மேகலையோடு கூடிய மூன்றுபாதமும் (௩௪௩)
வஜ்ரம் சூலம் கத்தி ஸ்ருவம் சக்தி இவைகளை வலதுகைகளிலுடை
யதாய் கதை பாசம் அக்னிபத்மம் சக்ரம் இவைகளை இடதுகைக
ளிலுடையதாய் (௩௪௪) அணுதித்வாதி குணங்களோடும் எல்லாமறி
யுந்தன்மையோடும் ஸ்வாஹாசக்திஸ்வதாசக்தியோடு கூடியதாய்
(௩௪௫) பஹுரூபஅதிரக்தஸுப்ரபகிருஷ்ணஜிஹ்வைகள் நான்கு
ம் மேன்முகத்தில் சாந்த ஸ்வரூபமாய் விளங்குவதும் (௩௪௬)

ரக்தஹிரண்யகனகம் முதலிய ஜிஹ்வைகள் மூன்றும் தனித்தனி நான்குமுகங்களிலுள்ளதாய் (௬௪௭) இந்தபிரகாரம் தியானித்து யௌவ்வன சிவாக்னி எனபெயரிட்டு ஆவாஹித்து நைவேத்யதூபதீபார்க்யம் செய்க (௬௪௮) இவ்வாறு யௌவ்வனசிவாக்னி ஸம்ஸ்காரத்தைச்சொன்னேம் இனி விவாஹாக்னியைக் கேட்பாயாக ஆச்சார்யருக்கு வலது பக்கத்தில் நெல் அரிசிகளேபரட்டி (௬௪௯) எட்டிதழ்கமலமெழுதிதங்கம் முதலிய பாத்திரங்களை இதின்மேல் வைத்து (௬௫௦) இதின் மேல் பட்டை பரத்தி ஐந்து பூணூலும் லிங்கஅடையாளமிட்டமாங்கல்யமும் வைத்து (௬௫௧)ஐந்து பூணூற்களிலும் ஈசானாதிபிரும்மபஞ்சகத்தைப்பூஜித்து பதினைந்து ஸரங்களில் (௬௫௨) பதினைந்துபுவனங்களைப்பூஜித்து பிரும்மமுடிச்சு ஐந்தில் ஸதாசிவம்நாதம் (௬௫௩) பிந்துசக்தி சிவம் இவர்களைப் பூஜித்து திருமங்கலியத்தில் சிவாய நம: என ஆஸன மூர்த்தி மூலத்தால் பூஜித்து(௬௫௪) ஹிருதயமந்திரத்தால் பூஜித்து நைவேத்ய தூபதீபார்க்யங்கொடுத்து ஹோமத்தின் பொருட்டு பொரிஸத்துமா (௬௫௫)யவைமுதலிய ஏழுதான்யங்கள் சரு நெய் இவைகளைச்சேகரித்து வைத்துக்கொண்டு பதினைந்து புவனங்களையும் ஸதாசிவய் நாதம் பிந்து சக்தி சிவம் ஹிருதயம் இந்த மந்திரங்களை விவாஹாந்தமாய் தத்தனி(௬௫௭) நூற்றெட்டாஹுதிசெய்து ஹோமாந்தியத்தில் முன்தரித்த பூணூலை எடுத்து இப்பொழுது பூஜித்த பூணூலை மேல்மேகலைக்குக் கீழ் சாத்தி (௬௫௯) இந்தஇடத்திலேயே திருமங்கலியத்தையுங் கட்டி விர்த்தசிவாக்னியை ஆஸனம் மூர்த்தி மூலத்தால் பூஜித்து (௬௬௦) விர்த்தாக்னிஸ்படிகநிறம் ஐந்து முகங்கள் (௬௬௧) பத்துகைகள் ஜடாமகுடம்மூன்றுகண்கள் சுமுகமுகம் எல்லா ஆபரணங்களுமணிந்ததாய் (௬௬௨) வெள்ளைவஸ்திரம் வெண்தாமரைப்பூமாலை ஆயிரந்தளத்தோடு கூடிய பத்மாஸனத்தின்மேலிருப்பதாய் (௬௬௩) மேகலாபரணமுடையமூன்றுகால்எல்லா லக்ஷணமும் பொருந்தி ஈசாமுகத்தில் ஏழு நாக்கு ஆறுகுணங்களால் நிறயப்பெற்றதாய் (௬௬௪) இதைச்சுற்றிலுள்ள நான்கு முகங்களில் அவ்வைந்து நாக்குடையதாய் அணுதித்வம் விபுத்வம் முதலியசக்தியோடு கூடியதாய் (௬௬௫) சூலம் வஜ்ரம் கத்தி ஸ்ருவம் சக்தி இவைகளை வலக்கைகளிலுடையதாய் அக்னி கதை பாசம்பத்மம் சக்கிரம்இவைகளை இடக்கைகளிலுடையதாய் (௬௬௬) ஸ்வாஹாஸ்வதாசக்திகளோடுகூடியதாய் விபூதிருத்ராக்ஷதாரணமுடையதாயுள்

ள (௩௬௭) இந்த விர்த்தாகனலை பிரதிஷ்டாதிகளில் தியா
னிக்க பிரதிஷ்டை ஆவர்த்தமனுவர்த்தம் புனராவர்த்தம்முதலிய
மூன்றிலும் (௩௬௮) விர்த்தசிவாக்னி வரை ஸம்ஸ்காரஞ்செய்து
ஹோமஞ்செய்தல்வேண்டும் இதற்கு வேறான அக்னியில் பிரதிஷ்
டைக்கு ஹோமஞ்செய்தல் கூடாது (௩௬௯) மோஹத்தால்செய்
வாறாகில் ராஜராஷ்டிரன்னுசத்தை அடையும் வாஸ்துசாந்து முத
ல்ரக்ஷாபந்தனம்வரைசெய்யப்படும் அக்னிகார்யத்தில் (௩௭௦) பா
லாக்னிவரைஸம்ஸ்கரித்து ஹோமஞ்செய்தல்வேண்டும்தீக்ஷை உ
த்ஸவம் பிராயச்சித்தம்முதலிய கார்யங்களில்செய்யப்படும் அக்னி
கார்யத்திற்குயௌவ்வனுக்னிவரை ஸம்ஸ்கரித்து ஹோமஞ் செய்
தல் வேண்டுமெனவும் (௩௭௧)பிரதிஷ்டைநித்யாக்னி இவைகளுக்
குவிர்த்தாக்னிஎனக்கூறப்படும் இவ்வாறுவிர்த்தாக்னிவரைஸம்ஸ்
கரித்து (௩௭௨) முன்சொல்லியபடிதியானித்து ஆவாஹித்துமது
பர்க்கம் நிவேதித்துவிர்த்தசிவாக்னி ஹிருதயபங்கயத்தில் சிவபெ
ருமானை ஆஸனமூர்த்திமூலத்தால் பூஜித்து(௩௭௩) ஐந்தாவரணக்
கிரமத்தாலும் பூஜித்து அக்னியாகிய நீசுவரதேஜஸ்பரிசுத்த மா
னது மிக மேலானது (௩௭௪) இதினுல் உனது ஹிருதயபங்கயத்
தில் சிவபெருமானைஆவாகிக்கிரேனென இவ்வாறுதியானித்து ஆ
வாஹித்துநைவேத்யதூபதீபாதிகள்செய்து (௩௭௫) குண்டத்தை
வாயாகப்பாவித்து நடுவிலுள்ள நாக்கில்விவாஹார்த்தமானஸம்ஸ்
காரத்தை (௩௭௬) வௌஷடந்தமூலத்தால் பூர்ணுஹுதிசெய்தல்
வேண்டும் நெய்யை ஸ்ருக்கிலேபூரித்து இதின்நடுவில் தங்கத்தா
மரைப்பூ (௩௭௭) தங்கவில்வம் தேங்காய்மூடி எலுமிச்சம்பழம்
வெற்றிலைபாக்கு பட்டு இவைகளை ஸ்ருக்கின்னுணியில் வைத்து
(௩௭௮) ஸ்ருவத்தை இதின்மேல் கவிழ்த்துவைத்து இதின் நு
னியில் புஷ்பம் நுனிதர்ப்பை இவைகளை வைத்து (௩௭௯) வல
மிடக்கைகளால் சங்கைப்போல் பிடித்து செவ்வயாக நின்று ஸ்
ருக்கின் வலக்கரத்திலே திருஷ்டியைவைத்து (௩௮௦) எழுந்துநி
ன்று நாபிக்கு குருக்காய் ஸ்ருக்கைப்பிடித்து (௩௮௧) ஸ்ருக்கின்
நுனியில் வைக்கப்பட்ட பார்வையோடு வௌஷட் முடிவான மூ
லமந்திரத்தால் இடது ஸ்தனம்வரை தூக்கி (௩௮௨) விச்னமல்
லாது யவப்பிரமாணதாரயாய் எல்லாநெய்யையும் அக்னியில்ஹோ
மஞ்செய்க ஸத்யோஜாதாதி பிரும்மபஞ்சகத்தாலும் (௩௮௩)
வௌஷடிறுதியாக அக்னியில் ஹோமஞ்செய்க திரும்ப மூலத்தா

லும் ஷடங்கமந்திரங்களாலும் வௌஷட் முடிவாக தனித்தனி ஹோமஞ்செய்வது (௩அச) விர்த்த சிவாக்னிக்கு முகாந்தமெனக் கூறப்படும் சிவபெருமானுக்கு வியாப்ய வியாபக ஹேதுவாயுள்ள (௩அ௫)பிரதிவி முதல்யஜமானனிறுதியாக உள்ளஎட்டு அங்கங்க ளாகும்சதுரச்ரகுண்டம்பிரதிவியும்அர்த்தசந்திரம் அப்புவும் ( ) திருகோணம் அக்னியும் ஷட்கோணம் வாயுவும் விர்த்தம் ஆகாச மும் பத்மம் ஸூர்யனும் (௩அஎ) எண்கோணஞ் சந்திரனும் யோனியஜமானனும் இந்தப்பிரகாரம் பிரதிஷ்டையில் எட்டு குண் டங்களைக் கற்பித்தல்வேண்டும் (௩அஅ) ஐய்ங்கோண எழுகோ ணம் ஒன்பதுகோணம் பத்துக்கோணம் பதினைந்துகோணம் பதி னறுகோணம் இவை முதலிய குண்டங்கள் போடுதல் கூடாது (௩அகூ) இவைகளை பிரதிஷ்டையில் நீக்கத்தக்கது மோஹத்தால் போடுவாராயின் ராஜராஷ்டிரங் கர்த்தா போக்தா இவைகள் நாச த்தை அடையும் (௩கூ0) மேலேசொன்ன ஐங்கோணம் முதலாகி ய குண்டங்கள் க்ஷூத்ரகர்ம்ம பிரதிஷ்டைக்கு போடுதல்வேண்டு ம் ஆத்மார்த்த லிங்கப்பிரதிஷ்டையிலும் தீக்ஷை பிராயச்சித்தகர் மங்களில் (௩கூக) விர்த்தாகாரமாகவாவது நாற்கோணமாயாவது போடுதல்வேண்டும். சதுரச்ரமாகப் போட்டுள்ள குண்டங்களி லும் பிரதானகுண்டம் விர்த்தமேயாகும் (௩கூ௨) எல்லா குண்ட ங்களுக்கும் விர்த்தம் பிரதானமாகும் சிவாச்ரமியாயிருக்கிற ஆதி சைவருக்கு (௩கூ௩) ஆத்மார்த்த விஷயமான தீக்ஷையிலும் நவ குண்டம் பிரதிஷ்டையில் கூறியவாறு யோன்யாதி குண்டங்கள் போடுதல்வேண்டும் (௩கூச) மஹாசைவர் முதல் ஸத்சூத்திரி இ றுதியாக ஆத்மார்த்த விஷயமான தீக்ஷையில் ஐந்து குண்டங்கள் போடுதல்வேண்டும (௩கூ௫) வர்ணாச்ரம அதீதர்களாய் அதிதீவிர பரிபாகிகளான எல்லா ஆத்மாக்களுக்கும் நவகுண்டம் போட்டு தீக்ஷைசெய்யலாம் (௩கூசு) குருக்கள் சக்திநிபாதம் பார்த்து அ ந்தந்த பரிபாகத்திற்குத்தக்கவாறு தீக்ஷித்தல்வேண்டும் (௩கூஎ) முக்திபதமுக்தி எனவும் ஸாயுஜ்யமுக்தி எனவு மிரண்டுவகைத் தாம் ஐந்துகுண்டம்போட்டு தீக்ஷிக்கப்படுபவர்கள் பதமுக்தியை அடைவார்கள் (௩கூஅ) ஒன்பதுகுண்டம்போட்டு தீக்ஷிக்கப்படு பவர்கள் ஸாயுஜ்யமுக்தியை அடைவார்கள் சதுரச்ரகுண்டம் பிர திவிஸ்வரூபமாயிருத்தலின் இது ஐந்து குணங்களோடு கூடியது பிரதிவிமுதல் ஆகாசமிறுதியாக ஐந்து குணத்தோடு கூடியது

(௩௯௯) ஆகாசத்திற்கு அதிபர் ஸதாசிவம் ஸதாசிவபதபிராப்தி
பதமுக்தி எனக் கூறப்படும் (௪௦௦) நிரோதமுதல் சிவஸ்தானம்வ
ரை (௪௦௧) ஆத்மாவுக்கு வியாபகமிருத்தலால் இது சிவபெருமா
னிடத்தைக்யமான ஸாயுஜ்யமுக்தி எனவும் பதமுக்தியைநோக்க
ஸாயுஜ்யமுக்தி மிக மேலானதெனவுங் கூறப்படும் (௪௦௨) சிவ பி
ராம்மணர்களுக்கு தீக்ஷையின்பொருட்டு சக்திநிபாதம் அதாவது
பரிபாகம் பார்க்கவேண்டுவதில்லை இவர்களுக்கன்யமான மற்ற எ
ல்லா ஆத்மகோடிகளுக்கும் சக்திநிபாத பரிபக்வம் பார்த்தே
(௪௦௩) தீக்ஷைபுரிதல்வேண்டும் பார்க்காவிடில் தீக்ஷை பயனற்ற
தாகும் ஆதிசைவபிராம்மணர்கள் முன்னமேயே பரமேசுவரரால்
தீக்ஷிக்கப்பட்டவராதலின் (௪௦௪) திரும்ப தீக்ஷை வேண்டுவதில்
லையாயினும் இவர்களுக்கு உபச்சாரத்தால் தீக்ஷைகூறியுள்ளது
இவர்கள்ஸ்வயமேஆச்சார்யரூபியாயிருத்தலால் தம்மிடமுள்ள ச
க்தியைபிரகாசப்படுத்தும் பொருட்டு (௪௦௫) திரும்பதீக்ஷை செ
ய்துகொண்டால் ஆத்மார்த்தபரார்த்தபூஜைக்கு அருகருவார் இந்
தப்பிரகாரம் (௪௦௬) அந்தந்தகாலஉசிதப்படி குண்டங்களைக்கற்பி
த்துக்கொள்க பிருதிவீ முதலிய எட்டுக்குண்டங்களும் சிவாக்னி
க்கு அங்கபூதமாயுள்ளது (௪௦௭) உன்மனாந்தத்திலுள்ள சிவஸ்வ
ரூபசிவாக்னி அங்கி எனக்கூறப்படும் இந்தபாவனாத்மகமாகிய சி
வாக்னி ஒன்பது பேதங்களாகும் (௪௦௮) நடுவில் விர்த்தசிவாக்
னியும் இதைச்சுற்றிலுள்ள எட்டு திக்குக்களிலுமுள்ள அக்னி
யைபிரித்தல்வேண்டும் (௪௦௯) ஆச்சார்யர் உட்கார்ந்திருக்கிற பிர
தான குண்டத்தைச்சுற்றிலும் மூர்த்திபர்கள் எட்டுகுண்டங்களி
லும் உட்கார்ந்து குண்டங்களுக்கு பதினெட்டு ஸம்ஸ்காரங்களை
(௪௧௦) செய்தல்வேண்டும் இதற்கு மேலான அக்ஷபாடகம்முதலி
ய ஸம்ஸ்காரம்செய்தல்கூடாது மோஹத்தால்ச்செய்வாராகில் கர்
த்தா போக்தாநாசமடைவர் (௪௧௧) இந்த அங்கஸ்வரூபமான கு
ண்டங்களுக்கு ஸ்ருவஸம்ஸ்காரம் ஆஜ்யஸம்ஸ்காரம் இவைகள்
செய்யக்கூடாது செய்தால் ராஜ்யநாசத்தை அடையும் (௪௧௨)
மற்றுமுள்ளஹோமதிரவ்யங்கள் யாவும் பிரதானகுண்டத்திலே
யே ஸம்ஸ்கரித்தல்வேண்டும் பிரதானகுண்டத்திலிருக்கிற ஸாமா
ன்யார்க்யஜலத்தால்அஸ்திரமந்திரமுச்சரித்து (௪௧௩) சுற்றிலுமு
ள்ள எட்டுகுண்டங்களையும் புரோக்ஷித்துமூர்த்திபர்கள் யாவரும்
அந்தந்தகுண்டத்திலுட்காருதல் வேண்டும் (௪௧௪) கூர்மாஸனத்

